# தென்னகக் குடைவரைக் கோயில்கள்



ஆசிரியர் :
தமிழகக் கோயிற் கலைச்செல்வர்
தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்
[கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர் (ஓய்வு)]



விற்பனை உரிமை :
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
154, டி. டி. கே. சாலை, ஆள்வார்பேட்டை,
சென்னை-18.
1989

# முன்னுரை

தமிழகத்தில் கோயில்கள் மக்களின் வாழ்க்கையில் இரண்டறக்கலந்து, நாகரீக வளர்ச்சியில் தலையாய பங்கைத் தாங்கி வந்தன. இன்றைய மக்கள் நலன் நாடும் மக்களாட்சியின் முன்னோடியாகக் கோயில்கள் கருதப்படுகின்றன. நாகரீகத்தின் உறைவிடமாக அவை விளங்கியமையால், அன்றைய நாகரீகம் ''கோயில் நாகரீகம்'' எனப்படுகிறது.

இத்தகைய சிறப்பு மிக்க கோயில்கள் பண்டைக் காலந்தொட்டு இருந்தமைக்கு இலக்கிய, கல்வெட்டுச் சான்றுகள் இருப்பினும், அந்நாளைய கோயில்கள் இன்று இல்லை. ஆதியும் அந்தமும் அற்ற இறைவனுக்குக் காலவெள்ளத்தால் அழியாக் கோயில்களை எழுப்பும் முயற்சியில் 7 ஆம் நூற்றாண்டில் குடைவரைக் கோயில்கள் தோற்றுவிக்கப்பட்டன. சென்ற பதின்மூன்று நூற்றாண்டுகளில் கோயில் கட்டிட மற்றும் சிற்பக்கலை, வெளி நாட்டினரும் சிரந்தாழ்த்தி வணங்கும்படி, வியத்தகு வளர்ச்சியினை அடைந்துள்ளது.

தமிழகக் கோயில் கட்டிட மற்றும் சிற்பக்கலையின் முதற்கட்டமாக விளங்கும் குடைவரைக் கோயில்களைப் பற்றிய நூல்கள் தமிழில் இல்லை. அவை தமிழகமெங்கும் பரந்து இருப்பினும், மக்களுக்கு மாமல்லபுரத்தில் உள்ள குடைவரைகளைப் பற்றித்தான் தெரியும். மாமல்லபுரம் நீங்கலாக ஏனைய இடங்களில் 79 குடைவரைகளும், ஒரு மலை தளியும் உள்ளன. கோயில்கள் என்றால் மக்கள் அறிந்து இருப்பார்கள்; காரணம் அங்கு நடைபெறும் பூசையில் மக்கள் கலந்து கொள்வதுதான். குடைவரைகள் இந்நிலையினின்றும் மாறுபட்டநிலையில

உள்ளன. பெரும்பாலான குடைவரைகளில் பூசை நடைபெறுவதில்லை. எனவே மக்கள் அவற்றை அறிய வாய்ப்பு இல்லை. ஆங்காங்கு உள்ள மக்களுக்குத் தங்கள் தங்கள் பகுதியில் உள்ளவற்றை மட்டும் தெரிந்து இருக்கலாம். பிற இடங்களில் உள்ளவற்றைப் பற்றி அறிய வாய்ப்பு இல்லை.

தமிழகத்தில் குடைவரைகள் எங்கு எங்கு உள்ளன என்பதற்கு முழுமையான தகவல்கள் அளிக்கும் நூல்கள் ஆங்கிலத்திலும் இல்லை. அவை உள்ள இடங்கள் பற்றிய தகவல்கள் பல நூல்களிலிருந்து தொகுக்கப் பட்டன. அவற்றிலும் அவை பற்றிய முழுவிபரங்கள் இல்லை. திரு. K. R. சீனிவாசன் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய "பல்லவர்கள் குடைவரைக் கோயில்கள்" என்ற நூலில் மாமல்லபுரம் மற்றும் ஏனைய இடங்களில் பல்லவர்களால் உருவாக்கப்பட்ட குடைவரைகளைப் பற்றிய விவரங்கள் உள்ளன. பாண்டியர், முத்தரையர் போன்ற பிற அரச பரம்பரையினரால் தோற்றுவிக்கப் பட்ட குடைவரைகளைப் பற்றிய விபரங்கள் அந்த நூலில் இல்லை. பாண்டிச்சேரியில் உள்ள French Institute of Indology என்ற நிறுவனம் குடைவரைக் கோயில்களின் புகைப்படங்களை மாநிலவாரியாகப் பல நூல்களாகத் தொகுத்து பிரெஞ்ச் மொழியில் வெளியிட்டு உள்ளது. தமிழகம் மற்றும் கேரளம் ஆகிய இரு மாநிலங்களில் உள்ள குடைவரைக் கோயில்களின் புகைப்படங்களைக் கொண்ட நூல் இவற்றில் ஒன்று. திரு. K. R. சீனிவாசன் அவர்களின் நூலும், பிரெஞ்ச் நிறுவனத்தால் வெளியிடப்பட்ட நூலும் குடைவரை களைப் பற்றித் தமிழில் எழுதப் பெரிதும் பயன்பட்டன. பிரெஞ்ச் நிறுவனத்தால் வெளியிடப்பட்ட நூலிலும் குடைவரைகளைப் பற்றி விரிவாகக் கூறப்படவில்லை; சுருக்கமாகவே தகவல்கள் அளிக்கப்பட்டுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.

குடைவரைகள் இருக்கும் இடங்களை அறிவதில் உள்ள உழைப்பைக் காட்டிலும் குறிப்பிட்ட இடங்களைத் தெரிவதில் பட்ட இன்னல்கள் மிகவும் அதிகமாம். குடைவரைகளைக் குறிப்பிடும் நூல்களில் பொதுவாக மாவட்டங்களின் பெயர்தான் கொடுக்கப்பட்டிருக்கும். எந்த வட்டத்தில் உள்ளது, எந்த ஊரிலிருந்து செல்லும் வழியில் உள்ளது என்பன போன்ற விபரங்கள் இருக்காது. உதாரணமாக திரு. சிவராமமூர்த்தி அவர்களின் "நடராசரும் கலையும் கலாசாரமும்" என்ற நூலிலிருந்து இராமநாதபுரம் மாவட்டத்தில் செவல் பட்டியில் ஒரு குடைவரை இருப்பதாகத் தெரிய வந்தது: அது இருக்கும் இடத்தை அறிய வேறு குறிப்புகள் இல்லை. மூன்று மாவட்டங்களாகப்பிரிக்குமுன் இராமநாதபுரம் மாவட்டம் பெரிய மாவட்டமாம். இந்தக் குடைவரை எங்கு உள்ளது என்பதைத்தெரிய, பலரை அணுக நேரிட்டது.

பிரென்ச் நிறுவனத்தால் வெளியிடப்பட்ட நூலில் குடைவரைகளை மாவட்ட வாரியாகப்பிரித்து, குறிப்பிட்ட குடைவரை எந்த ஊரினின்றும் எந்தத் திக்கில் எவ்வளவு தொலைவில் உள்ளது என்ற விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த நூல் கிடைத்தபின், பல இடங்களை அறிவது எளிதாகி விட்டது. இருப்பினும் ஒரு சில இடங்களை அறிவதில் இன்னல்கள் ஏற்படத் தான் செய்தன. உதாரணமாக, பூவாலக்குடி என்ற ஊர் புதுக்கோட்டையினின்றும் 30 கிலோ மீட்டர் தொலைவில் தென் கிழக்காக உள்ளதாகக் குறிப்பு கொடுக்கப்பட்டுள்ளது. புதுக்கோட்டையில் பணிபுரியும் தொல்பொருள் துறையினரிடமிருந்து அந்த ஊர் பொன்னமராவதிக்கு அடுத்துள்ளது என்று மட்டும் தெரியவந்தது. எனவே பொன்னமராவதி சென்றேன். அங்கே பேருந்து நிலையத்தில் பேருந்து நடத்துனர், ஓட்டுநர் ஆகியோருடன் தொடர்பு கொண்டதில், அந்த இடம் தெரியவில்லை. பேருந்து நிலையத்தில் ஒவ்வொரு

பேருந்து நிறுவனத்திற்கும் Brokers இருப்பார்கள். அவர்கள் அந்த வட்டாரங்களில் உள்ள ஊர்கள், அவற்றிற்குச் செல்லும் பேருந்துகள் ஆகிய விவரங்களை நன்றாகத் தெரிந்துகொண்டிருப்பர்கள். அவர்களாலும் பூவாலக்குடி என்ற ஊர் எங்கு உள்ளது என்ற விவரத்தைக் கொடுக்கமுடியவில்லை. கோயில் குருக்களுக்குக் குடைவரைக் கோயிலைப்பற்றித் தெரிந்து இருக்கலாம் என்ற நம்பிக்கையில் அந்த ஊரில் உள்ள சிவாலயம் சென்றேன். நான் சென்ற போது குருக்கள் இல்லை. அப்போது கோயிலில் தொல்பொருள் ஆய்வுத் துறையைச் சார்ந்த அலுவலர் ஒருவர் இருந்தார். அவருக்கும் அந்த ஊர் தெரியவில்லை. இருப்பினும் அவர் வங்கியில் பணிபுரியும் ஒருவர் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அவருக்கும் பூவாலக்குடியைப் பற்றித் தெரியாவிடினும், அந்த ஊரைச் சார்ந்த ஒருவர் மற்றொரு வங்கியில் பணிபுரிகிறார் என்றும், அவர் நாள்தோறும் பூவாலக்குடியினின்றும் வருவதாகத் தகவல் அளித்தார். அதன்பின் குறிப்பிட்ட அலுவலரைச் சந்தித்து, பூவாலக்குடி செல்லும் வழி அறிந்து, அங்குச் சென்றேன். ஒரு சில குடைவரைகள் இருக்கும் இடங்கள் பற்றித் தொல்பொருள் ஆய்வுத்துறை, இந்துசமய அறநிலையப் பாதுகாப்புத்துறை ஆகிய அரசுத்துறைகளில் பணிபுரியும் அலுவலர்களிடமிருந்து தெரிந்து கொண்டேன்.

குடைவரைகள் இருக்கும் இடங்களைத் தெரிந்த பின், அங்குச் செல்வதிலும் இன்னல்கள் ஏற்பட்டன. குடைவரை இருக்கும் இடம் வரை பேருந்து வசதி இருக்காது. எனவே குறிப்பிட்ட ஊர் வரைக்கும் பேருந்தில் சென்று, அதன்பின் 2 முதல் 4 கிலோ மீட்டர் தொலைவு நடக்கவேண்டும். ஒரு சிலவற்றை அடைய காட்டு வழியிலும் செல்லவேண்டும். உதாரணமாக, தேவர்மலை குடைவரை, திரைக்கோயில் குடைவரை ஆகியவற்றை அடைய காட்டு வழியில்தான் செல்ல

வேண்டும். அவ்வப்போது எதிரே வரும் கிராம மக்களிடமிருந்து செல்லும் வழியை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். ஒரு சில சமயங்களில் கிராம மக்கள் கொடுக்கும் தவறான தகவல்களின் பேரில் பேருந்தில் செல்லக்கூடிய இடங்களுக்குக்கூட நடந்து செல்ல நேரிட்டது. இத்தகைய காட்டுவழிகளில் நல்லவெயிலில் தனியாக நடந்து செல்வது பற்றி இந்த நூலைப்படிக்கும் அன்பர்களின் ஊகத்திற்கு விட்டு விடுகிறேன்.

குடைவரைகள் இருக்கும் இடங்களைத் தெரிய, அங்குச் செல்ல பல இன்னல்களை ஏற்று அங்குச் சென்ற பின், அவைபூட்டப்பட்டிருந்தால், எப்படி இருக்கும்! குடைவரைகள் பொதுவாகப் பூட்டப்படாமல்தான் இருக்கும். பூசனை நடைபெறும் ஒரு சில குடைவரைகள் பூட்டப்பட்டிருக்கும். குருக்கள் நாள்தோறும் பூசைக் காக வரமாட்டார்; வாரத்தில் குறிப்பிட்ட நாளில் தான் வருவார். குடைவரைக்குச் செல்லுமுன் இவற்றை யெல்லாம் தெரிந்து கொண்டுதான் செல்ல வேண்டும். இல்லையெனில் குடைவரையைப் பற்றிய எந்தத் தகவலும் கிடைக்கப்பெறாது; வீண் உழைப்பாக முடிந்து விடும். வல்லம் குடைவரைக் கோயில்களைப் பற்றிய தகவல்களை அறிய மூன்று முறை செல்ல நேர்ந்தது காரணம் குறிப்பிட்டநாளில்கூட, குருக்கள் பூசை செய்ய வரவில்லை. குருக்கள் பூசைக்குப் போகாத நாளில் சென்றதால், தேவர்மலை குடைவரைக்காக மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள பேரையூரினின்றும் குருக்களை அழைத்துச் சென்றேன். மேலச்சேரி குடைவரையைக்காண அந்த ஊர் இறை அன்பர்களின் உதவியால் குருக்களை அடுத்த ஊரினின்றும் அழைத்து வரப்பட்டது.

1979 ஆம் ஆண்டில் குடைவரைக் கோயில்களை நேரில் கண்டு, அவற்றைப்பற்றி எழுதத்தொடங்கினேன்.

36 குடைவரைகள் மற்றும் ஒரு மலை தளி ஆகியவை பற்றிய எனது கட்டுரைகள் ''நெல்லைக் குடைவரைக் கோயில்கள், மற்றும்''தமிழகக்குடைவரைக்கோயில்கள்'' என்ற இரு நூல்களாக 1980, 1984 ஆம் ஆண்டுகளில் திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரால் வெளியிடப்பட்டன. மேலே கண்ட இரு நூல்களிலும் வேறு கோயில்கள் பற்றிய கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. பல காரணங்களால் இப்பணியினைத் தொடர்ந்து செய்ய இயலவில்லை. எனினும் அவ்வப்போது ஆங்காங்குச் செல்லும் போதெல்லாம், அருகில் உள்ள குடைவரைக் கோயில்களைப் பார்த்து வருவது வழக்கம். சென்ற ஆண்டின் இறுதியிலிருந்து இப்பணியில் மீண்டும் தனி ஊக்கம் கொண்டு புதுக்கோட்டை, தென் ஆற்காடு, வடாற்காடு, செங்கல்பட்டு. கன்னியாகுமரி ஆகிய மாவட்டங்களில் பயணம் மேற்கொண்டு, எடுத்துக் கொண்ட பணியினை இறையருளாலும் பெரியோர்கள் ஆசியாலும் ஒரு வகையாக முடித்துவிட்டேன்.

இந்த நூலில் 44 குடைவரைகளைப்பற்றிய 32 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. வேறு கோயில்கள் பற்றிய செய்திகள் இதில் இல்லை. கடைசியில் மாமல்லபுரம் நீங்கலாக ஏனைய இடங்களில் உள்ள குடைவரைகளில் காணப்படும் பொதுத் தன்மைகள், இறைவனது பல்வேறு வடிவங்கள், சிறப்புகள் ஆகியவை தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

இதுவரை வெளிவந்துள்ள தமிழ் மற்றும் ஆங்கில நூல்களில் குறிப்பிடப்பட்ட குடைவரைகளைப் பற்றிய கட்டுரைகள் ஏற்கனவே வெளியிடப்பட்ட இரண்டு நூல்கள் மற்றும் இந்த நூல் ஆகிய மூன்று நூல்களில் இடம் பெற்றுள்ளன. குடைவரை ஏதேனும் விடுபட்டு இருக்கலாம் அவைபற்றித் தெரிந்தால், அவை பின்னால்

சேர்க்கப்படும். இந்த மூன்று நூல்களிலும் விவரிக்கப்படும் குடைவரைகளையும் மலைதளியையும் நான் நேரில் சென்று கண்டவைவாம். அவற்றைப் பற்றிய தகவல்களைத் தவறுகள் நேராதபடி சேகரித்துக் கட்டுரைகளை எழுதியுள்ளேன். என்னையும் மீறித் தவறுகள் ஏற்பட்டிருப்பின். இதைப்படிக்கும் அன்பர்கள் அவற்றைப் பொறுத்தருளவேண்டுகிறேன்.

தமிழகமெங்கும் பரந்து காணப்படும் குடைவரைகளைக் கண்டு எழுதும்படி தம் இறுதிக் காலம் வரை ஊக்குவித்ததுடன், குடைவரைகளைப்பற்றிய இரு நூல்களையும் வெளியிட்ட கழகத்தின் முன்னாள் ஆட்சியாளர் அமரர் திருமிகு. வ. சுப்பையாபிள்ளை அவர்கட்கு நான் என்றும் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். புதுக்கோட்டை மற்றும் தென் ஆற்காடு ஆகிய மாவட்டங்களில் நான் இந்தப் பணியினை மேற்கொண்டபோது என்னுடன் தன் முதுமையிலும் அயராது துணையாக வந்து, அவ்வப்போது ஆர்வம் ஊட்டிய எனது மைத்துனர் திருமலி N. T. சுப்ரமணியம் அவர்களுக்கும், மதுரை, காமராசர் மாவட்டங்களில் நான் பயணம் மேற்கொண்டபோது என்னுடன் துணையாக வந்து பல விதங்களிலும் உதவிபுரிந்த மதுரை அன்பர் திருமிகு. P. சுந்தரமூர்த்தி அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன். திருநெல்வேலி மாவட்டத்தில் நான் அரசுப்பணியில் இருந்தபோது இப்பணியில் உறுதுணையாக இருந்த அன்பர்கள் பலருக்கும் குறிப்பாக என் நெருங்கிய அன்பர் திருமலி A. V. சுந்தரராசன் அவர்களுக்கும் என் மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்த நூலை வெளியிட நிதிஉதவி அளித்துள்ள திருமலை திருப்பதி திருக்கோயிலுக்கும், என்னைச்

சந்தித்த போதெல்லாம் இப்பணியினைத் தொடர்ந்து முடிக்குமாறு தூண்டிவந்ததுடன், இந்த நூலை எழில் மிக்கதாக அச்சிட்டு வெளியிட்ட கழக ஆட்சியாளர் திருமன். இரா. முத்துக்குமாரசாமி எம்.ஏ., பி.லிப். அவர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றியினைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

''என்கடன் பணிசெய்து கிடப்பதே''

தி. இராசமாணிக்கம்

# உள்ளுறை

பக்கம்

முன்னுரை V
அணிந்துரை XIII

செங்கல்பட்டு மாவட்டம்

1. திருக்கழுக் குன்றம் குடைவரைக் கோயில் 1
2. வல்லம் குடைவரைக் கோயில்கள் 5
3. பல்லாவரம் குடைவரைக் கோயில் 7

வடஆற்காடு மாவட்டம்

4. மாமண்டூர் குடைவரைக் கோயில்கள் 9
5. விளாப்பாக்கம் குடைவரைக் கோயில் 14
6. குரங்கணில் முட்டம் குடைவரைக் கோயில் 15
7. மகேந்திரவாடி குடைவரைக் கோயில் 18
8. திரைக் கோயில் குடைவரைக் கோயில் 20
9. சீயமங்கலம் குடைவரைக் கோயில் 21

தென் ஆற்காடு மாவட்டம்

10. அறை கண்ட நல்லூர் குடைவரைக் கோயில் 26
11. கீழ் மாவிலங்கை குடைவரைக் கோயில் 28
12. மண்டகப்பட்டுக் குடைவரைக் கோயில் 30
13. மேலச்சேரி குடைவரைக் கோயில் 33
14. தளவானூர் குடைவரைக் கோயில் 35
15. சிங்காவரம் குடைவரைக் கோயில் 38

திருச்சி மாவட்டம்

16. தான்தோன்றிமலை குடைவரைக் கோயில் 42

புதுக்கோட்டை மாவட்டம்

17. குன்னாண்டார் கோயில் குடைவரைக் கோயில்கள் 44
18. மலையடி பட்டி குடைவரைக் கோயில்கள் 49
19. தேவர்மலை குடைவரைக் கோயில் 55
20. பூவாலக்குடி குடைவரைக் கோயில் 58
21. மலையக் கோயில் குடைவரைக்கோயில்கள் 60
22. சித்தன்னவாசல் குடைவரைக் கோயில் 64

பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டம்

23. அரளிப்பட்டி குடைவரைக் கோயில் 71

மதுரை மாவட்டம்

24. அரிட்டாபட்டி குடைவரைக் கோயில் 73
25. மாங்குளம் குடைவரைக் கோயில் 76
26. வரிச்சூர் குடைவரைக் கோயில்கள் 77

காமராசர் மாவட்டம்

27. திருச்சுழியல் குடைவரைக்கோயில் 82
28. மூவரை வென்றான் குடைவரைக் கோயில் 83
29. திருத்தங்கல் குடைவரைக் கோயில் 85
30. செவல் பட்டி குடைவரைக் கோயில் 87

கன்னியாகுமரி மாவட்டம்

31. குறத்தியறை குடைவரைக் கோயில் 90
32. சிவகிரி குடைவரைக் கோயில் 91

## பொது


| | |
|---|---|
| சிறப்புகள் | 120 |
| பல்லவர்கள், பாண்டியர்கள், முத்தரையர்கள் பாணி | 12[illegible] |
| பிற்சேர்க்கை—1. குடைவரையின் விளக்கங்கள் | 128 |
| பிற்சேர்க்கை—2. ஆசனம், முத்திரை ஆகியவற்றின் விளக்கங்கள் | 131 |
| பிற்சேர்க்கை—3. கோயில் கட்டிடக் கலைச் சொற்கள் | 133 |
| பிற்சேர்க்கை—4. Books Consulted | 135 |
| பிற்சேர்க்கை—5. ஆலய விளக்கம் | 137 |




# தென்னகக் குடைவரைக் கோயில்கள்

---

## 1. திருக்கழுக்குன்றம் குடைவரைக் கோயில்

செங்கல்பட்டினின்றும் மாமல்லபுரம் செல்லும் வழியில் சுமார் 14 கிலோ மீட்டர் தொலைவில் தொண்டை நாட்டுச் சிவப்பதிகளில் 28-வது தலமான திருக்கழுக்குன்றம் உள்ளது, கழுகுகள் வழிபட்ட காரணத்தால் கழுக் குன்றம் என்று அழைக்கப் பெறும் இந்தத் தலம் மூவராலும் பாடப்பெற்றது.

மலைமேல் கோயில் கொண்டுள்ள வேதகிரீசுவரர் கோயிலிலிருந்து வடப்புறமாக இருக்கும் படிகளின் வழியாக இறங்கி வரும் வழியில் கிழக்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது. இதன் முகப்பில் உள்ள இரு தூண்களும் எட்டுப்பட்டையாகவும், சதுரங்களாகவும் பகுக்கப்பட்டிருக்க, அரைத்தூண்கள் இரண்டும் பகுக்கப்படாமல் உள்ளன. இவற்றின் இடையில் கோணவடிவில் போதிகை காணப்படுகிறது. முதல் வரிசையைப் போன்றே இரண்டாவது வரிசையில் தூண்களும், அரைத்தூண்களும் உள்ளன.

குடைவரைக் கோயில் முகமண்டபம், அர்த்த மண்டபம், கருவறை ஆகியவற்றைக் கொண்டது. முகமண்டபத்தில் தெற்கு மற்றும் வடக்கு நோக்கியபடி இரு கைகளுடன் இரு வாயிற்காப்போர் உள்ளனர்: சமபங்க நிலையில் நின்றபடி உள்ள இவர்களின் இருகைகளில் ஒன்று ஊருமுத்திரையிலும் மற்றொன்று தூக்கிய

நிலையிலும் அமைக்கப்பட்டுள்ளன. கைகளில் பொது வாகக் காணப்படும் கதை இல்லை. நேரான பார்வை உடைய இவர்களது மார்பில் இடது தோள் மேலிருந்து கீழாக முப்புரிநூல் அமைக்கப்பட்டுள்ளது.

குடைவரையின் பின் சுவரில் கருவறை உருவாக்கப்பட்டுள்ளது. முப்பட்டைக் குமுதம், வரி வரிமானம் ஆகியவற்றைக் கொண்ட அதிட்டானம் உடையது கருவறை. இதன் மேல் புறத்தில் கபோதம் என்ற அமைப்பு காணப்படுகிறது. இதன் இரு புறமும் நான்கு அரைத்தூண்களுக்கு இடையில் திரிபங்க நிலையில் நின்றபடி இரு வாயிற்காப்போர் உள்ளனர். நேரான பார்வையைக் கொண்ட இவர்களது இருகை களில் ஒருகை ஊருமுத்திரையிலும், மற்றொரு கை கதை மீது சாய்த்து வைத்த நிலையிலும் அமைந்துள்ளன. இவர்களது மார்பில் முப்புரிநூல் இடது தோள் மேலிருந்து கீழாகச் செல்கிறது.

இடப் புறம் உள்ள வாயிற் காப்போரை ஒட்டியுள்ள புரையில் திருமால் உருவாக்கப்பட்டுள்ளான். 4 கைகள் கொண்ட இவனது பின்வலக்கையில் பிரயோக நிலையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் காணப்பட, முன்இடக்கை ஊருமுத்திரையில் உள்ளது. முன்வலக்கையில் இருப்பது சரியாகத் தெரியவில்லை. சமபங்க நிலையில் நின்றபடி உள்ள இவனது மார்பில் முப்புரி நூல் வாயிற் காப்போருக்கு உள்ளது போன்றே உள்ளது.

வலப்புறம் உள்ள வாயிற்காப்போரை அடுத்துள்ள புரையில் பிரமா உருவாக்கப்பட்டுள்ளான். சமபங்க நிலையில் நின்றபடி உள்ள இவன் 3 தலைகளுடன் காணப் படுகின்றான். இவனுக்கும் மார்பில் முப்புரி நூல் திருமாலுக்குப் போன்று உள்ளது. இவனது பின்வலக் கையில் அக்கமாலை காணப்பட., முன்வலக்கையில்

மலரும், முன்இடக்கை ஊருமுத்திரையிலும் அமைக்கப் பட்டுள்ளன. காதுவரை உருவாக்கப்பட்டுள்ள இவனது சடை அமைப்பு வேறு எங்கும் இல்லாத தனித்தன்மை வாய்ந்ததாகக் காணப்படுகிறது.

கருவறையின் உள்ளே வட்டமான ஆவுடையாருடன் கூடிய இலிங்கத்திருவுரு உள்ளது. இது பாறையிலேயே அமைந்தது அன்று; தனியாக வைக்கப் பட்டதாம்.

இங்குள்ள தமிழ்க் கல்வெட்டு பல்லவர்களின் தமிழ்க் கல்வெட்டுகளில் மூன்றாவதாகக் கருதப்படுகிறது. இதில் வாதாபி கொண்ட நரசிங்க போத்தராசர் என்று கூறப் பட்டுள்ளது. மேலும் மலைமேலுள்ள மூலவராகிய இறைவனைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்தக் கோயில் ஒருகல் மண்டபக் குடைவரைக் கோயில் என்று அழைக்கப்படுகிறது.



# 2. வல்லம் குடைவரைக் கோயில்கள்

செங்கல்பட்டினின்றும் மாமல்லபுரம் செல்லும் வழியில் 4 கிலோ மீட்டர் தொலைவில் வல்லம் என்னும் சிற்றூர் உள்ளது. அதனை அடுத்துள்ள மலையில் நடுப்பகுதியில் 3 குடைவரைக் கோயில்கள் கிழக்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ளன. தென்புறத்தில் உள்ள சிறிய குடைவரைக் கோயில் சிவனுக்கும், வடப்புறத்தில் உள்ள சிறிய குடைவரைக் கோயில் திருமாலுக்கும் உரியனவாம். இவற்றிற்கு இடையில் இன்னமும் சற்று உயரமான பகுதியில் உருவாக்கப்பட்ட சிவனுக்குரிய குடைவரைக்கோயில் பெரியதாம்.

தென்புறமாக உள்ள சிவனுக்குரிய சிறிய குடைவரைக்கோயில் கருவறைமட்டும் கொண்டது. முகப்பில் தூண்கள் ஏதும் இல்லை. வட்டமான போதிகைகளைக் கொண்ட இரு அரைத் தூண்கள் காணப்படுகின்றன. கருவறையை ஒட்டி இருபுறம் உள்ள புரைகளில் வாயிற் காப்போர் இருவர் உள்ளனர். அவர்களைச் சரியாக உருவாக்கவில்லை. நேரான பார்வையை உடைய அவர்களின் இருகைகளில் ஒன்று ஊருமுத்திரையிலும், மற்றொன்று கதை மீதும் காணப்படுகின்றன. கருவறையின் உள்ளே பிற்காலத்தைச் சார்ந்த இலிங்கத் திருவுரு உள்ளது. வலப்புறம் உள்ள அரைத்தூணை ஒட்டி தாமரை இருக்கை மீது பிள்ளையார் காணப் படுகிறார்.

வடப்புறத்தில் உள்ள திருமாலுக்கு உரிய சிறிய குடைவரைக் கோயில் தென்புறம் உள்ளதைப் போன்று கருவறை மட்டும் கொண்டதாம். முகப்பில் தூண்கள் அமைக்கப்படவில்லை; கோணப்போதிகைகளைக் கொண்ட இரு அரைத்தூண்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

கருவறையை ஒட்டிய இரு புரைகளில் இரு வாயிற் காப்போர் காணப்படுகின்றனர். சமபங்க நிலையில் நின்றபடி உள்ள அவர்கள் நேரான பார்வையைக் கொண்டவர்களாக உள்ளனர். அவர்களின் இருகைகளில் ஒருகை ஊருமுத்திரையிலும், மற்றொரு கை வணக்கத்தைக் குறிக்க, தூக்கிய நிலையிலும் உருவாக்கப் பட்டுள்ளன. முகப்பின் இடப்புறம் 4 கைகள் உடைய துர்க்கை சமபங்க நிலையில் நின்றபடி அமைக்கப் பட்டுள்ளாள். அவளது பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் காணப்பட, முன் இடக்கை ஊருமுத்திரையிலும் முன் வலக்கை அபய முத்திரையிலும் உள்ளன. கருவறையின் உள்ளே பிற்காலத்தைச் சார்ந்த திருமால் தன் இரு துணைவியருடன் காணப் படுகிறான்.

மேலே குறிப்பிட்ட இரு குடை வரைக் கோயில்களுக்கும் இடையில் உள்ள பெரிய அளவிலான குடைவரைக்கோயில் கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டதாம். இதன் முகப்பில் எட்டுப்பட்டை மற்றும் சதுரங்கள் எனட் குக்கப்பட்ட இருதூண்களும், பகுப்பு ஏதும் இல்லாத இரு அரைத்தூண்களும் காணப் படுகின்றன. கருவறைக்கு இருபுறமும் உள்ள புரைகளில் வாயிற் காப்போர் இருவர் உள்ளனர். சாய்ந்த பார்வையை உடைய அவர்கள் திரிபங்க நிலையில் நின்றபடி காணப்படுகின்றனர். அவர்களின் இரு கைகளில் ஒன்று ஊருமுத்திரையிலும், மற்றொன்று கதை மீதும் உள்ளன. கதையைச் சுற்றி பாம்பு காணப்படுகிறது.

கருவறையின் உள்ளே பிற்காலத்தைச் சார்ந்த இலிங்கத்திருவுரு உள்ளது. இறைவனது திருப்பெயர் வேதாந்தேசுவரர் என்பதாம்.

இதன் முகப்பை ஒட்டி, இரு புரைகள் செதுக்கப் பட்டுள்ளன. வலப் புரையில் 4 கைகள் உடைய வலம்புரி

விநாயகரின் அழகான வடிவம் காணப்படுகிறது. இடப் புறம் உள்ள புரையில் 2 கைகள் கொண்ட சேட்டை பர்யாங்காசனத்தில் உட்கார்ந்தபடி உருவாக்கப்பட்டு உள்ளாள். இந்த வடிவம் சரியாக அமைக்கப்படவில்லை. இந்த இரண்டு வடிவங்களும் பிற்காலத்தவையாகக் கருதப்படுகின்றன.

இங்குள்ள தமிழில் உள்ள கல்வெட்டு பல்லவர்களது தொன்மையான கல்வெட்டுகளில் ஒன்றாகக் கருதப்படு கிறது. இது வசந்தேசுவரம் குடைவரைக்கோயில் என்று அழைக்கப்படுகிறது.

———

# 3. பல்லாவரம் குடைவரைக் கோயில்

சென்னை—விழுப்புரம் பெருவழியில் சென்னையிலிருந்து சுமார் 16 கிலோ மீட்டர் தொலைவில் பல்லாவரம் என்னும் ஊர் உள்ளது. அதனை அடுத்து சுமார் 2 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள மலையில் தெற்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப் பட்டுள்ளது.

முகப்பு 4 தூண்களையும், இரண்டு அரைத்தூண் களையும் கொண்டதாகவும், இரண்டாவது வரிசையில் அதே போன்று தூண்களும், அரைத்தூண்கள் இருந்த தாகவும் திரு. K. R. சீனிவாசன் தம் "பல்லவர்கள் குடைவரைக் கோயில்கள்" என்ற நூலில் குறிப்பிட்டு உள்ளார். இது முகமதியர்களது தொழுகைத் தலமாக மாற்றப்பட்டு, மசூதி குடைவரையின் சில பகுதிகளை மறைத்துக்கட்டப் பட்டுள்ளதால், முற்காலத்தில் இருந்த இதன் அமைப்பைத் தற்போது அறிய இயலவில்லை.

தற்காலத்தில் முகப்பில் எட்டுப் பட்டையாகவும் சதுரங்களாகவும் பகுக்கப் பட்ட இரு தூண்கள் காணப் படுகின்றன. இரண்டாவது வரிசையிலும் அதே போன்று இருதூண்கள் உள்ளன. இங்குள்ள போதிகைகள் வட்டமான அமைப்பினைக் கொண்டவை. முகமண்டபம் மற்றும் அர்த்தமண்டபம் ஆகியவற்றைக் கொண்ட இந்தக் குடைவரையின் பின் சுவரில் அமைக்கப்பட்ட கருவறையின் இருபுறமும் புரைகள் உள்ளன. கருவறையின் நுழை வாயிலுக்குக் கீழே அதிட்டானம் அமைந்துள்ளது.

இங்குள்ள கல்வெட்டில் மகேந்திரவர்மனது பல பட்டப்பெயர்கள் வடமொழி, தமிழ், தெலுங்கு ஆகிய

பல மொழிகளில் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் அவன் தன்னை ''சங்கீரண சாதி'' என்று குறிப்பிட்டுள்ளான். சதுரஸ்ரம், திஸ்ரம், மிஸ்ரம், கண்டம், சங்கீரணம் என்ற ஐந்து தாள வகைகளுள் சங்கீரணம் என்பதை அவன் புதிதாகக் கண்டுபிடித்து, அதன் வகைகளையும், ஒழுங்குகளையும் அமைத்தான் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். சங்கீரணம் என்ற தாளவகையைக் கண்டு பிடித்தமையால்தான் இவன்தன்னை ''சங்கீரண சாதி'' என்று அழைத்துக்கொண்டான்.

குடைவரையின் பின் சுவரில் ஐந்து கருவறைகள் அமைந்து இருந்த காரணத்தால், இது ''பஞ்சபாண்டவர் குடைவரைக் கோயில்'' என்று அழைக்கப்பெறுகிறது. இந்த ஒரு குடைவரைக் கோயில் மட்டுமே முகமதியர்களது மசூதியாக மாற்றப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

# 4. மாமண்டூர் குடைவரைக் கோயில்கள்

காஞ்சிபுரத்திலிருந்து செய்யார் செல்லும் வழியில் உள்ள மாமண்டூரை அடுத்துச் சுமார் 1½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மலையில் 4 குடைவரைக்கோயில்கள் உருவாக்கப்பட்டுள்ளன. மாமண்டூரினை அடுத்த நரசமங்கலம் என்ற சிற்றூரினின்றும் செல்ல வண்டிப் பாதை உள்ளது. அங்கிருந்து குடைவரைக் கோயில்கள் 1 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளன. இங்குள்ள 4 குடைவரைக் கோயில்களில் இரண்டு மலையின் மேல் பகுதியிலும், மீதி இரண்டு மலையின் அடிவாரத்திலும் அமைந்துள்ளன. இவையாவும் கிழக்குநோக்கி உருவாக்கப் பட்டுள்ளன.

மலைமேல் அமைந்துள்ள தென் கோடியிலுள்ள குடைவரைக் கோயிலின் கிழக்கு நோக்கியுள்ள முகப்பில் 5 தூண்களும், 2 அரைத்தூண்களும் காணப்படுகின்றன. அவற்றில் 4 தூண்கள் மட்டும் நடுவில் எட்டுப்பட்டை யாகவும், மேலும் கீழும் சதுரங்களாகவும் பகுக்கப்பட்டு உள்ளன. இரண்டாவது வரிசையில் 4 தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் காணப்படுகின்றன. அவற்றில் 4 தூண்கள் மட்டும் எட்டுப்பட்டையாகவும், சதுரங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளன. இவற்றின் இடையே வட்டமான போதிகைகள் உருவாக்கப்பட்டு உள்ளன. முகமண்டபம் மற்றும் அர்த்த மண்டபம் ஆகியவற்றைக் கொண்ட இந்தக் குடைவரையின் பின் சுவரில் 5 கருவறைகள் அமைக்கப்பட்டுள்ளன. கருவறைக்குள்ளே இறைவன் திருவுருவங்களை வைக்க நீண்ட குழிகள் காணப்படுகின்றன. இவையன்றி, அர்த்தமண்டபத்தின் இருபுறங்களிலும் மேலும் இருகரு வறைகள் உள்ளன. ஆக இங்கு 7 கருவறைகள் அமைக்

கப்பட்டுள்ளன. தென் புறமாகவும் இரு தூண்கள் மற்றும் இரு அரைத் தூண்களைக் கொண்ட முகப்பு உருவாக்கப் பட்டுள்ளது. தூண்களும் அரைத்தூண்களும் எட்டுப் பட்டையாகவும், சதுரங்களாகவும் பகுக்கப்படவில்லை. இவற்றின் இடையில் வட்டமான போதிகைகள் அமைக் கப்பட்டுள்ளன. வெளிப்புறமாக இருபுரைகள் காணப் படுகின்றன. மலையைக் குடையும்போது ஏற்பட்ட விரிசல் காரணமாக இப்பணி தொடராது முற்றுப் பெறாது நின்றுவிட்டது. விரிசல் காரணமாக பணிமுற்றுப் பெறாது தொடர்ந்து இருப்பின் கருவறைகளைச் சுற்றித் திருச்சுற்று அமைக்கப்பட்டிருக்கலாம் என்று கருதப்படு கிறது. இது மாமல்லபுரத்தில் உள்ள பஞ்சபாண்டவர் குடைவரைக்கோயில் போன்ற அமைப்பைக்கொண்டது. மாமல்லபுரத்திற்கு வெளியில் இத்தகைய அமைப்பினை உடைய குடைவரைக் கோயில் வேறு ஏதும் இல்லை.

இதை அடுத்துள்ள குடைவரைக்கோயில் இரண்டு தூண்கள் மற்றும் இரண்டு அரைத்தூண்கள் ஆகிய வற்றைக் கொண்ட முகப்பினையும், நீண்ட மண்டபத் தையும் கொண்டது. தூண்களும் அரைத்தூண்களும் எட்டுப்பட்டையாகவும், சதுரங்களாகவும் பகுக்கப்பட வில்லை. தூண்களுக்கும் அரைத்தூண்களுக்கும் இடையில் வட்டமான போதிகை உருவாக்கப்பட்டு உள்ளது. இந்தக் குடைவரையும் முற்றுப் பெறாத நிலையில் நின்று விட்டது.

மேலே குறிப்பிட்ட இரு குடைவரைக் கோயில் களுக்குச் சற்றுத் தள்ளி மலையின் அடிவாரத்தில் இரு குடைவரைகள் அமைக்கப்பட்டுள்ளன. முதற் குடை வரைக்கோயிலின் முகப்பில் எட்டுப்பட்டையாகவும், சதுரங்களாகவும் பகுக்கப்பட்ட இரு தூண்களும், பகுக்கப்படாத இரு அரைத்தூண்களும் காணப்படு கின்றன. தூண்கள் மகேந்திரவர்மன் பாணியில் பருமனாக உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றின் இடையில்

கோணவடிவில் போதிகைகள் காணப்படுகின்றன. இங்குள்ள கபோதம் சரியாக அமைக்கப்படவில்லை. வடப்புறமாக உள்ள அரைத்தூணில் மாமன்னன் முதலாம் இராசராச சோழனின் கல்வெட்டு காணப்படுகிறது. முதல் வரிசையைப் போன்றே இரண்டாவது வரிசைத் தூண்களும் அரைத்தூண்களும் அமைக்கப்பட்டுள்ளன. முக மற்றும் அர்த்த மண்டபங்களையுடைய இந்தக் குடைவரையின் பின் சுவரில் மூன்று கருவறைகள் உருவாக்கப்பட்டுள்ளன. அர்த்த மண்டபத்தின் தென் புறச் சுவரில் சோழ மன்னன் பரகேசரிவர்மனது கல்வெட்டு உள்ளது. இது யாரைக் குறிப்பிடுகிறது என்பது தெரியவில்லை.

கருவறைகளுக்கு முன் வட்டமான போதிகைகளை உடைய 10 அரைத்தூண்களும், மேலே கபோத அமைப்பும் உருவாக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கருவறைக்கும் இரண்டு இரண்டாக மூன்று கருவறை களுக்கும் 6 வாயிற்காப்போர் அமைக்கப்பட்டுள்ளனர். கருவறையின் உள்ளே வைக்க இருக்கும் இறைவனின் திருவுருவிற்கு ஏற்ப வாயிற்காப்போரின் தோற்றத்தில் வேறுபாடுகள் உருவாக்கப்பட்டுள்ளன. இருகைகளைக் கொண்ட இவர்களது மார்பில் முப்புரி நூல் இடது தோளிலிருந்து கீழே செல்கிறது. தென்புறம் உள்ள இருவர் நேரான பார்வை உடையவர்கள். அவர்களது தலையில் சடாமகுடம் முகத்தில் தாடியுடன் முனிவரின் தோற்றத்தில் காணப்படுகின்றனர். சமபங்க நிலையில் நின்றபடி உள்ள இவர்களது ஒரு கையில் மலர் உள்ளது. தென்புறம் உள்ளவரின் மற்றெரு கை தொடைமீது இருக்க, வடபுறம் உள்ளவரின் மற்றொரு கை மார்பை ஒட்டி உள்ளது. வாயிற்காப்போர் முனிவரின் தோற்றத்தைக் கொண்டிருப்பதால், கருவறையின் உள்ளே பிரமாவின் திருவுருவை வைக்க எண்ணி இருக்கலாம் எனக்கருத வேண்டியுள்ளது. நடுவில் உள்ள வாயிற்காப்போர் திரிபங்க நிலையில் நின்றபடி

உள்ளனர். ஒரு கை கடி முத்திரையிலும், மற்றொரு கை கதைமீது சாய்ந்த நிலையிலும் காணப்படுகின்றன. நேரான பார்வையுடன் சமபங்க நிலையில் நின்றபடி உள்ள வடப்புறம் உள்ள இரு வாயிற்காப்போரின் ஒருகை தொடைமீது காணப்பட, மற்றொருகை வணக்கத்தைக் குறிக்கத் தூக்கிய நிலையில் உருவாக்கப்பட்டுள்ளது.

இங்கு ஆங்காங்கு வர்ணப் பூச்சுகள் காணப்படு கின்றன. இது ருத்ரவாலீசுவரம் குடைவரைக் கோயில் என்று அழைக்கப்பெறுகிறது.

வடகோடியிலுள்ள குடைவரைக் கோயிலின் முகப்பில் உள்ள இரு தூண்கள் மட்டும் எட்டுப்பட்டை யாகவும் சதுரங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளன. அவை மகேந்திரவர்மன் பாணியில் பருமனாகக் காணப்படு கின்றன. இங்கு மேலும் பகுக்கப்படாத இரு அரைத் தூண்களும் உள்ளன. தூண்கள்மற்றும் அரைத்தூண் களுக்கு இடையில் வட்டமான போதிகைகள் உருவாக்கப் பட்டுள்ளன. தூண்களின்கீழ் மற்றும் மேல்பகுதிகளில் உள்ள முன்பக்கம் மற்றும் இருபக்கங்களிலும் சதுர அமைப்பிற்குள் தாமரை இதழ்கள் செதுக்கப்பட்டுள்ளன. பின் பக்கம் தாமரை இதழ்களை உருவாக்கவில்லை. அரைத் தூண்களில் முன் பக்கங்களில் தாமரை இதழ்களின் ஒரு பாகம் காணப்பட, பக்கவாட்டில் தாமரை இதழ் முழுமையாக உள்ளது. பின் பக்கத்தில் அதை அமைக்கவில்லை. ஆங்காங்கே வர்ணப் பூச்சுகள் காணப்படுகின்றன. தென்புறச் சுவரில் மகேந்திரவர் மனது கல்வெட்டு உள்ளது.

மண்டபத்தை மட்டும் கொண்ட இந்தக் குடை வரையின் பின் சுவரில் கருவறை சற்று முன்னால் தள்ளியபடி உருவாக்கப்பட்டுள்ளது. வரி, வரிமானம், உபபீடக் குமுதம் அதிட்டானத்தைக் கொண்ட

அதிட்டானமும், கபோதமும் கொண்ட கருவறையின் நுழைவாயிலுக்கு இருபுறமும் அரைத்தூண்கள் உருவாக் கப்பட்டுள்ளன. நீண்ட சதுர அமைப்புடைய, உடைய கருவறையின் உள்ளே பாறையிலேயே அமைக்கப்பட்ட மேடை உள்ளது. எனவே இதைத் திருமாலுக்கு உரிய தாகக் கருதலாம். வாயிற்காப்போர் இங்கு உருவாக்கப் படவில்லை.

இங்குள்ள கல்வெட்டில் மகேந்திரவர்மன் "மத்த விலாச பிரகசனம்" என்ற நூலை இயற்றியதாகக் கூறப்பட்டுள்ளது. இந்த நூலில் "தட்சிண சித்திரம்" என்ற நூலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இது சித்திரக் கலையைப் பற்றியதாக இருக்கலாம் என்று கருதப் படுகிறது.

---

## 5. விளாப்பாக்கம் குடைவரைக் கோயில்

ஆற்காட்டிலிருந்து கண்ணமங்கலம் செல்லும் வழியில் ஆற்காட்டிலிருந்து 6 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மலை பஞ்சபாண்டவர் மலை என்றும், திருப்பாமலை என்றும் அழைக்கப் பெறுகிறது. இந்த மலையில் கிழக்கு நோக்கி குடைவரை ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது. இதற்கு மிகவும் அருகில் உள்ள ஊர் விளாப்பாக்கம் என்ற காரணத்தால், இது விளாப்பாக்கம் குடை வரைக்கோயில் என்று குறிக்கப் படுகிறது.

இதன் முகப்பில் 6 தூண்களும், 2 அரைத்தூண்களும் உள்ளன. அதே போன்று இரண்டாவது வரிசையாக ஆறு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் செதுக்கப் பட்டுள்ளன. இவை சதுரம், எட்டுப்பட்டையாகப் பகுக்கப்படவில்லை. இதில் உருவாக்கப்பட்டுள்ள வட்டமான போதிகைகள் சரியாக அமைக்கப்பட வில்லை. தூண்கள் மகேந்திரவர்மன் பாணியில் பருமனாக உள்ளன.

முகமண்டபம், அர்த்தமண்டபம் ஆகியவற்றைக் கொண்ட இந்தக் குடைவரையின் பின் சுவரில் 7 கருவறைகள் உருவாக்க முயன்று, என்ன காரணத் தாலோ முற்றுப் பெறாமல் நின்று விட்டன.

முகப்பில் உள்ள ஆறு தூண்கள் மற்றும் இரண்டு அரைத்தூண்களுக்கு இடையில் ஏழு வாசல்கள் அமைந் துள்ளதால், இது "ஏழு அடி வாசல் மலை" என்றும் இங்குள்ள மக்களால் அழைக்கப்பெறுகிறது.

— — —

# 6. குரங்கணில் முட்டம் குடைவரைக்கோயில்

காஞ்சிபுரத்திலிருந்து செய்யாறு செல்லும் வழியில் உள்ள தூசி என்ற ஊரிலிருந்து சுமார் 3 கிலோ மீட்டர் தொலைவில் குரங்கணில் முட்டம் என்னும் ஊர் உள்ளது. இங்கு ஊருக்கு நடுவில் உள்ள பாறையில் குடைவரைக் கோயில் கிழக்கு நோக்கி உருவாக்கப்பட்டுள்ளது. ஏனைய இடங்களைப் போலன்றி இது தரைமட்டத் திற்குக் கீழ் அமைந்துள்ளது.

இதன் முகப்பில் நடுவில் எட்டுப் பட்டையாகவும், மேலும் கீழும் சதுரமாகவும் பகுக்கப்பட்ட இரண்டு தூண்களும், பகுக்கப்படாத இரண்டு அரைத்தூண்களும் காணப்படுகின்றன. இவற்றின் இடையில் வட்டமான போதிகைகள் உள்ளன. இதே போன்று இரண்டாவது வரிசைத் தூண்களும் அரைத்தூண்களும் அமைக்கப் பட்டுள்ளன.

முகமண்டபம் மற்றும் அர்த்தமண்டபம் ஆகிய வற்றைக்கொண்ட இதன் பின் சுவரில் மூன்று கருவறைகள் உருவாக்கப்பட்டுள்ளன. கருவறைகளின் முகப்பில் பத்து அரைத்தூண்கள் காணப்படுகின்றன. கீழே உபானம், ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம் ஆகியவற்றைக் கொண்ட அதிட்டானத்தையும், மேலே கபோதத்தையும் கருவறைகள் கொண்டுள்ளன. அரைத் தூண்களிலும் வட்டமான போதிகைகள் அமைக்கப் பட்டுள்ளன. அர்த்தமண்டபம் மற்றும் முகமண்டபம் ஆகியவற்றின் இருபக்கச் சுவர்களிலும் நான்கு கருவறைகள் மேலே கபோத அமைப்புடன் உருவாக்கப் பட்டுள்ளன. அர்த்தமண்டபத்தில் உள்ள இரு கருவறைகளுக்கு அதிட்டானம் இருக்க, முகமண்டபத்தில்

உள்ள இரு கருவறைகளுக்குப் படிகள் மட்டுமே உள்ளன. அர்த்த மண்டபம் மற்றும் முகமண்டபம் ஆகியவற்றிற்கு இடையில் தென்புறமாக உள்ள அரைத்தூணில் கன்னர தேவன் ஆகிய ஐவரின் கல்வெட்டுகள் காணப்படு கின்றன. கருவறைகளின் உள்ளே இறைவன் திருவுருவங்கள் வைக்கக் குழிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பிற்காலத்தைச் சார்ந்த பிரமா மற்றும் சிவபெருமானின் சிலைகள் இரண்டு இங்குக் காணப்படுகின்றன.

குடைவரையின் பின் சுவரில் அமைந்துள்ள 3 கருவறைகளுக்கும் 6 வாயிற் காப்போர் உருவாக்கப் பட்டுள்ளனர். 2 கைகள் கொண்ட இவர்களது மார்பில் முப்புரிநூல் இடப்புறம் இருந்து கீழ் நோக்கிச்செல்லும் அமைப்பில் செதுக்கப்பட்டுள்ளது. வடப்புறத்தில் உள்ள இரு வாயிற்காப்போர் சமபங்க நிலையில் நின்றபடி காணப்படுகின்றனர்; நேரான பார்வை கொண்ட இவர்களது ஒருகை தொடை மீது உள்ளது. இவர்களில் வடப்புறம் உள்ளவரின் மற்றொரு கையின் விரல்கள் மடங்கிய நிலையில் அக்குளுக்குக் கீழே காணப்பட, தென்புறம் உள்ளவரின் மற்றொரு கை சரியாக உருவாக்கப்படவில்லை. நடுவில் உள்ள இரு வாயிற் காப்போரின் ஒரு கை இடுப்பில் இருக்க, மற்றொரு கை கதை மீது வைத்தபடி உள்ளது. கதையைச் சுற்றி பாம்பு அமைக்கப்பட்டுள்ளது. இதில் வடப்புறம் உள்ளவரின் தலையில் ஒரு கொம்பு மட்டும் காணப்படுகிறது. திரிபங்க நிலையில் நின்றபடி உள்ள இவர் சாய்ந்த பார்வை உடையவராக இருக்க, தென்புறம் உள்ளவர் சமபங்க நிலையில் நின்றபடி நேராகப் பார்த்தபடி உருவாக்கப்பட்டுள்ளார். தென்புறம் உள்ள இரு வாயிற்காப்போரும் சமபங்க நிலையில் நின்றபடி ஒருகை தொடை மீது வைத்தும், மற்றொரு கையை வணக்கத்தைத் தெரிவிக்கும் நிலையில் மேலே தூக்கிய படியும் காணப்படுகின்றனர்.

இந்த ஊர் குரங்கு, அணில், முட்டம் (காகம்) ஆகியவை பூசித்துப் பேறு பெற்ற தலமாதலால், குரங்கணில் முட்டம் என்ற பெயர் பெற்றது. தேவாரப் பாடல் பெற்ற தொண்டை நாட்டுச் சிவப்பதிகளில் இது ஆறாவது தலமாகும். ஞானசம்பந்தப் பெருமானால் பாடப்பெற்ற பதியாகும். ஆனால் அவர் தம் திருப்பாடல்களில் குடைவரைக் கோயிலைப் பற்றிய குறிப்பு ஏதும் இல்லை.

இது கல்மண்டபக் குடைவரைக்கோயில் என்று அழைக்கப்படுகிறது.



# 7. மகேந்திர வாடி குடைவரைக் கோயில்

காஞ்சிபுரத்திலிருந்து நெமலி வழியாக சோளிங்கர் செல்லும் வழியில் மகேந்திரவாடி என்ற ஊர் உள்ளது. ஊருக்கு வெளிப்புறத்தில் சுமார் ½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ள பாறையில் கிழக்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது.

கீழ் மாவிலங்கையில் உள்ள தனியாகக் காணப்படும் சிறிய பாறையில் கருவறைமட்டும் கொண்ட சிறிய அளவிலான குடைவரைக் கோயில் அமைந்து இருக்க, இங்கு அதைவிடப் பெரிய பாறையில் கருவறை, முகமண்டபம், அர்த்த மண்டபம் ஆகியவற்றைக் கொண்ட குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது. ஒரு குன்றில் அமைந்துள்ள இந்தக் கோயில் முற்காலத்தில் குன்றுக் கோயில் என்று அழைக்கப் பட்டிருக்க வேண்டும். அது மருவி தற்காலத்தில் குண்டுக் கோயில் என்று வழங்கப்பட்டு வருகிறது. பல்லவ மன்னன் மகேந்திரவர்மனின் ஒரு சில வைணவக் கோயில்களில் இது ஒன்று எனக் கருதப்படுகிறது.

முகப்பில் உள்ள இரு தூண்களும் நடுவில் எட்டுப் பட்டையாகவும், மேலும் கீழும் சதுரமாகவும் பகுக்கப் பட்டிருக்க, இரு அரைத்தூண்கள் பகுக்கப்படாமல் உள்ளன. தூண்களின் சதுரங்களில் நான்கு பக்கங்களிலும் சதுர அமைப்புக்குள் தாமரை இதழ்கள் செதுக்கப் பட்டுள்ளன. இவற்றின் நான்கு மூலைகளிலும் கொடிகள் உருவாக்கப்பட்டுள்ளன. இதே போன்று இரண்டு தூண்களையும், இரண்டு அரைத்தூண்களையும் கொண்டது இரண்டாவது வரிசை. இங்கும் தூண்கள் மட்டும் எட்டுப்பட்டையாகவும், சதுரங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளன. ஆனால் தூண்களின் சதுரங்களில்

முன் வரிசையில் உள்ளது போன்று தாமரை இதழ்கள் அமைக்கப்படவில்லை. தூண்களுக்கும் அரைத் தூண்களுக்கும் இடையில் வட்டமான போதிகைகள் காணப் படுகின்றன.

முகமண்டபம், மற்றும் அர்த்தமண்டபம் ஆகிய வற்றைக் கொண்ட இந்தக் குடைவரைக் கோயிலின் பின் சுவரில் கருவறை அமைக்கப்பட்டுள்ளது. கருவறையின் நுழை வாயிலுக்கு இரு புறமும் அரைத்தூண்கள் காணப்பட, அவற்றை அடுத்துள்ள புரைகளில் வாயிற் காப்போர் உருவாக்கப்பட்டுள்ளனர். சமபங்க நிலையில் நின்றபடி உள்ள வாயிற் காப்போரின் இருகைகளில் ஒருகை கடிமுத்திரையிலும், மற்றொருகை ஊருமுத் திரையிலும் காணப்படுகின்றன.

இங்குள்ள கல்வெட்டு பல்லவ மன்னன் மகேந்திர வர்மனுக்கு முற்பட்ட காலத்தில் செங்கல், மரம், உலோகம், சுண்ணாம்பு ஆகிய பொருட்களைக் கொண்டு கோயில்கள் கட்டப்பட்டதாகக் கூறுகிறது. இது மகேந்திரவர்மனுக்கு முன்னும் கோயில்கள் இருந்ததை உறுதி செய்கிறது.

இது மகேந்திர விஷ்ணு கிரகம் என்று அழைக்கப் படுகிறது.

## 8. திரைக்கோயில் குடைவரைக்கோயில்

தேசூரினின்றும் வந்தவாசி செல்லும் வழியில் திரைக்கோயில் என்ற சிற்றூர் உள்ளது. அவ்வூரில் உள்ள மலையில் இயற்கையாக அமைந்துள்ள சரிவில் குடைவரைக் கோயிலை உருவாக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு முற்றுப்பெறாமல் நின்று விட்டது. முகப்பு இரண்டு தூண்களையும் இரண்டு அரைத்தூண்களையும் கொண்டது. அவை மேலும் கீழும் சதுரங்களாகவும், நடுவில் எட்டுப் பட்டையாகவும் பகுக்கப்படவில்லை. இவற்றின் இடையில் உருவாக்கப்பட்டுள்ள போதிகைகள் கோணவடிவைக் கொண்டனவாம். குடைவரையை உருவாக்குவதில் முகப்பில் தூண்கள் மற்றும் அரைத்தூண்கள் செதுக்கப்பட்டதுடன் வேலை நின்று விட்டது. பாறையை வெட்டும் போது சரியாக வெட்டுப்படாது சிதறுண்ட காரணத்தால், வேலை பாதியில் நின்று இருக்கலாம் என்று ஊகிக்கத் தோன்றுகிறது.

## 9. சீயமங்கலம் குடைவரைக்கோயில்

செஞ்சியிலிருந்து வந்தவாசி செல்லும் வழியில் தேசூருக்குச் சுமார் 1½ கிலோ மீட்டர் தொலைவில் சீயமங்கலம் என்ற சிற்றூர் உள்ளது. இங்குள்ள மலையில் மேற்கு நோக்கி குடைவரைக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. இதை ஒட்டி மகாமண்டபம், முகமண்டபம், கோபுரம் ஆகியவை பிற்காலத்தில் கட்டப்பட்டுள்ளன. மகேந்திரவர்மனின் பல பட்டப் பெயர்களில் ஒன்றான அவனிபாஜனன் என்ற பெயரால், இது அவனிபாஜனன் குடைவரைக்கோயில் என்று அழைக்கப்பெறுகிறது.

இந்தக் குடைவரை கருவறை, அர்த்த மண்டபம், முக மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. மேலும் இரண்டு வரிசைத் தூண்களும், அரைத் தூண்களும் அமைக்கப்பட்டுள்ளன.

முகப்பில் மேலும் கீழும் சதுரங்களாகவும், நடுவில் எட்டுப் பட்டையாகவும் பகுக்கப்பட்ட இரண்டு தூண்களும், இரண்டு அரைத் தூண்களும் காணப்படுகின்றன. இவற்றிற்கு இடையில் நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகை உருவாக்கப்பட்டுள்ளது. இரண்டாவது வரிசையிலும் முதல் வரிசையைப்போன்று, பகுக்கப்பட்ட இரண்டு தூண்களும் இரண்டு அரைத் தூண்களும் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு இடையில் உள்ள போதிகைகள் வட்டமான அமைப்பினைக் கொண்டன.

முதல் வரிசையில் உள்ள இரு தூண்களில் உள்ள மேற்புறமாக உள்ள சதுரங்களில் முன்புறம் சிங்கங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. பக்கவாட்டில் இருபுறமும்

பூவேலைப்பாடுகள் காணப்பட, பின்புறம் ஒன்றும் செதுக்கப்படவில்லை. கீழ்ப்புறமாக உள்ள சதுரங்களில் முன்புறமும், பக்கவாட்டில் இருபுறமும் பூ வேலைகள் காணப்படுகின்றன. பின்புறத்தில் ஒன்றும் இல்லை; எட்டுப்பட்டைகளில் ஒன்றும் அமைக்கப்படவில்லை.

வலது மற்றும் இடது அரைத் தூண்களை ஒட்டி மேலே உள்ள சதுர அமைப்புகளில் முன்புறம் பெண் உருவாக்கப்பட்டுள்ளாள். இடப்புறம் உள்ள பெண்ணின் வலக்கையில் மலரும், இடக்கை கடிமுத்திரையிலும் காணப்படுகின்றன. இவர்களை இறைவனது அன்பர்களாகக் கொள்ளலாம். மேல் சதுரங்களில் கருவறையை நோக்கி பூ வேலைகள் செதுக்கப்பட்டுள்ளன.

வலப்புற அரைத்தூணில் தூண்களை நோக்கிய மேலே உள்ள சதுர அமைப்பில் விடையுடன் சிவபெருமானும் அன்னையும் நின்ற நிலையில் காணப்படுகின்றனர். சிவபெருமானின் நான்கு கைகளில் முன் வலக்கை கடிமுத்திரையிலும், முன் இடக்கை பின்னால் நிற்கும் காளை மீதும் இருக்க, பின் இடக்கையில் அக்கமாலை காணப்படுகிறது. பின் வலக்கையில் இருப்பது சரியாகத் தெரியவில்லை. அன்னையின் இரு கைகளில் வலக்கை காளை மீதும், இடக்கை கடிமுத்திரையிலும் உள்ளன. ஆகமங்களில் விருஷபாரூட மூர்த்திக்குத்தான் [பெற்றம் ஊரும் பெம்மான்] விதிகள் கூறப்பட்டுள்ளன. அதன்படி, இந்த வடிவில் இறைவனும் இறைவியும் விடையுடன் நின்ற நிலையிலும் இருக்கலாம் அல்லது அதன் மீது உட்கார்ந்தும் இருக்கலாம். ஆனால் சிற்பக்கலை வல்லுநர்கள் கூறும் விவரங்களிலிருந்தும் விடைமீது அமர்ந்துள்ள வடிவத்தை விருஷபாரூடர் என்றும் விடையுடன் நின்ற நிலையில் இருக்கும் வடிவத்தை விருஷபாந்திகர் என்றும் கொள்ள வேண்டியுள்ளது. இதன்படி இந்த வடிவை விருஷபாந்திகர்

என்று கொள்ளலாம்; இத்தகு வடிவம் வேறு குடைவரைக் கோயில்களில் இல்லை.

இடப்புறம் உள்ள அரைத்தூணில் தூண்களை நோக்கிய மேலேஉள்ள சதுர அமைப்பில் ஆடல்வல்லான் திருஉரு உள்ளது. இவனது 4 கைகளில் முன் வலக்கை அபயமுத்திரையிலும், முன் இடக்கை கத்யவலம்பித முத்திரையிலும், பின் வலக்கையில் தீயும், பின் இடக் கையில் மழுவும் காணப்படுகின்றன. இருமருங்கும் இருவர் காணப்படுகின்றனர். இடப்புறம் உள்ளவர் மத்தளம் அடிக்கும் நிலையிலும், வலப்புறம் உள்ளவர் வணங்கும் நிலையிலும் உள்ளனர். பாம்பு ஒன்று இசையைக் கேட்கும் நிலையில் காணப்படுகிறது. ஆடல்வல்லான் காலடியில் முயலகன் இல்லை. நெல்லை மாவட்டம் திருமலாபுரம் குடைவரைக்கோயில், காமராசர் மாவட்டம் செவல்பட்டி குடைவரைக் கோயில் ஆகியவற்றில் உள்ள ஆடல்வல்லான் திருவுருவங் களினின்றும் இது வேறுபட்டு காணப்படுகிறது.

இவ்வாறு முகப்பில் தூண்களில் புடை சிற்பங்களை உருவாக்குவது சாளுக்கியர்பாணி என்று கருதப்படுகிறது. இத்தகை அமைப்பு வேறு எந்தக் குடைவரைக் கோயிலிலும் இல்லை.

வலப்புறம் உள்ள அரைத்தூணை அடுத்து இரு அரைத்தூண்களுக்கு இடையில் வாயிற்காப்போன் உள்ளான். திரிபங்க நிலையில் நின்றபடி உள்ள இவனது வலக்கையில் கத்தியும், இடக்கையில் கேடயமும் அமைக்கப்பட்டுள்ளன. இவன் தலைக்கு மேல் அழகான மகர தோரண அமைப்பு உருவாக்கப் பட்டுள்ளது. இடப்புறம் உள்ள அரைத்தூணை அடுத்தும் மேலே குறிப்பிட்ட அமைப்புகளுடன் வாயிற் காப்போன் ஒருவன் காணப்படுகிறான். அவனது கைகளில் கத்தியும் கேடயமும் இருக்க, அவனது கால்கள் சதுர அமைப்பைக் கொண்டுள்ளன; கைகளில்

கத்தி, கேடயம் ஆகியவற்றுடன் வாயிற்காப்போர் வேறு குடைவரைக் கோயில்களில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் வாயிற் காப்போரின் தலைக்கு மேல் மகர தோரண அமைப்பும் வேறு எந்தக் குடைவரைக் கோயிலிலும் இல்லை.

கருவறையில் சதுரமான ஆவுடையாருடன் இலிங்கத்திருவுரு உள்ளது. இறைவனின் திருப்பெயர் தம்பேசுவரர் என்பதாம். இலிங்கத்திருவுரு தனியாக அமைக்கப்பட்டதாம். கருவறையின் நுழைவாயிலை அடுத்து இருபுறமும் இரு வாயிற்காப்போர் திரிபங்க நிலையில் நின்றபடி நேராகப் பார்த்தபடி உள்ளனர். வலப்புறம் உள்ளவரின் இடக்கை கதைமீது இருக்க, வலக்கை கடிமுத்திரையில் உள்ளது. இவனது தலையில் இருபக்கமும் இரு கொம்புகள் மகேந்திரவர்மன் பாணியில் உள்ளன. பல்லவர்களின் கொடி காளை என்ற காரணத்தால், அதைக் குறிக்க வாயிற்காப்போர் தலையில் கொம்புகள் அமைக்கப்பட்டன போலும். இடப்புறம் உள்ளவரின் இடக்கை கதைமீது இருக்க, வலக்கை இடக்கை மேல் நீட்டிய நிலையில் உள்ளது. இவனது தலையில் கொம்புகள் இல்லை. இருவரின் கதைகளைச் சுற்றி பாம்புகள் காணப்படுகின்றன.

இங்குப் பல்லவர்கள், மற்றும் சோழர்களின் கல்வெட்டுகள் பல உள்ளன. அவற்றில் காலத்தால் முற்பட்டது முகப்பில் உள்ள வலப்புறத் தூணில் பொறிக்கப்பட்டுள்ளது. இது பல்லவ கிரந்த எழுத்தில் வடமொழியில் உள்ளது. இந்தக் கோயிலின் பெயர் அவனிபாஜனபல்லவேசுவரகிரகம் என்று அந்தக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. மேலும் இது லலிதாங்குரன் என்ற அரசனால் உருவாக்கப்பட்டதாக அந்தக் கல்வெட்டு கூறுகிறது. அவனிபாஜனன் என்பதைப் போன்று லலிதாங்குரன் என்பதும் மகேந்திர வர்மனின் பட்டப் பெயர்களில் ஒன்று.

இடப்புறம் உள்ள தூணில் உள்ள தமிழில் உள்ள கல்வெட்டு பல்லவமன்னன் நந்தி விக்ரமவர்மனது 3ஆவது ஆட்சி ஆண்டைச் சார்ந்தது. பல்லவ மன்னனின் கீழ் சிற்றரசனாக இருந்த கங்க மன்னனின் அனுமதி பெற்று திருப்பாலையூர் கிராமத்தலைவன் முகமண்டபம் கட்டிய செய்தியை அந்தக் கல்வெட்டினின்றும் தெரியவருகிறது. இதில் குறிப்பிடும் பல்லவ மன்னன் கி. பி. 731 முதல் 796 வரை ஆட்சி புரிந்த இரண்டாம் நந்திவர்மன் பல்லவமல்லனாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

---

# 10. அறைகண்ட நல்லூர் குடைவரைக் கோயில்

தென் பெண்ணை ஆற்றின் தென் கரையில் திருக்கோயிலூரும், வடகரையில் அறை கண்ட நல்லூரும் உள்ளன. அறை கண்ட நல்லூரை அடுத்த ஆற்றின் கரையில் உள்ள பாறையின் மேல் அறையணிநாதர் கோயில் உள்ளது. திருஞானசம்பந்தப் பெருமான் இங்குள்ள இறைவனை வணங்கி, திருப்பதிகம் பாடியதை "ஆவினைந்து உகந்து ஆடுவார் அறையணி நல்லூரை அணைந்துஏத்தி" எனச் சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

திருக்கோயில் கட்டப்பட்டுள்ள பாறைக்கு அடியில் குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது. இதன் முகப்பு நான்கு தூண்களையும் இரண்டு அரைத்தூண் களையும் கொண்டது. சதுரம், எட்டுப்பட்டை என இவை பகுக்கப்படாது மிகவும் பருமனாக உள்ளன. இவற்றிற்கு இடையில் உருவாக்கப்பட்ட போதிகைகள் கோண வடிவைக் கொண்டன. இது அர்த்த மற்றும் முகமண்டபங்களைக் கொண்டது. மண்டபத்தின் உள்ளே முகப்பில் உள்ளது போன்று இரண்டாவது வரிசையாக பகுக்கப்படாத நான்கு தூண்களும் இரண்டு அரைத் தூண்களும் செதுக்கப்பட்டுள்ளன. மண்டபத்தின் பின் புறமாக உள்ள பாறையில் ஐந்து கருவறைகளை அமைக்கச் சதுரமாக வெட்டத் தொடங்கிய நிலை காணப்படுகிறது. இத்துடன் குடைவரையை உருவாக்கும் வேலை நின்று விட்டது. இவ்வாறு முடிவு பெறாமல் வேலை நின்றதற்குக் காரணம் தெரியவில்லை.

ஐந்து அறைகள் போன்ற அமைப்பை இது கொண்டமையால், ஏனைய இடங்களைப்போன்று இவையும் பாண்டவர்களுடன் தொடர்பு படுத்தி,

"பாண்டவர்கள் குகை" என இங்கு வழக்கில் சொல்லப் படுகிறது. பாண்டவர்களின் ஐந்து அறைகளால் அலங்கரிக்கப்பட்ட நல்லூர்; எனவே இது "அறையணி நல்லூர்" எனப்பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. திருஞானசம்பந்தப் பெருமான் தேவாரத்திலும் இது அறையணி நல்லூர் என்றே கூறப்பட்டுள்ளது.

இது மகேந்திரவர்மன் பாணியில் உருவாக்கப்பட்ட குடைவரைக் கோயிலாகும்"

---

## 11. கீழ்மாவிலங்கை குடைவரைக் கோயில்

திண்டிவனத்திலின்றும் வந்தவாசி செல்லும் பெரு வழியில் மேல் மாவிலங்கை என்ற ஊர் உள்ளது; அங்கிருந்து 1 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கீழ் மாவிலங்கை என்ற ஊருக்குச் செல்லும் வழியில் ஊருக்கு வெளியில் பல பெரிய பாறைகள் காணப்படுகின்றன. அவற்றில் ஒன்றில் குடைவரைக் கோயில் உருவாக்கப் பட்டுள்ளது.

கிழக்கு நோக்கி அமைந்துள்ள இந்தக்குடைவரை கருவறையை மட்டும் கொண்டது. நுழை வாயிலின் இருபுறமும் வாயிற்காப்போர் இருவர் காணப்படு கின்றனர். ஏனைய குடைவரைக் கோயில்களில் வாயிற் காப்போர் நேராகவோ அல்லது சாய்ந்தோ பார்த்தபடி செதுக்கப்பட்டிருப்பர். ஆனால் இங்கு இவர்கள் குடை வரையின் நுழை வாயிலை நோக்கியபடி உருவாக்கப் பட்டுள்ளனர்.

கருவறையின் உள்ளே பாற்கடலில் பள்ளி கொண்ட பரமனான திருமால் சமபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் நீண்ட சதுரமான இருக்கைமீது அமைக்கப்பட்டுள்ளான். நான்கு கைகள் கொண்ட இவனது பின் வலக்கையில் சக்கரமும், பின் இடக்கையில் சங்கும் இருக்க, முன் வலக்கை அபயமுத்திரையிலும், முன் இடக்கை கடிமுத்திரையிலும் காணப்படுகின்றன. இவன் அணிந்துள்ள ஆடையின் அமைப்பு ஏனைய குடைவரைக் கோயில்களில் பொதுவாகக் காணப்பெறும் ஆடை அமைப்பினின்றும் வேறுபட்டு உள்ளது. இரண்டு கால்களுக்கும் இடையில் ஆடையின் மடிப்பு பொதுவாகத் தெளிவாகக் காட்டப்பட்டிருக்கும்; ஆனால் இங்கு

குடை அவ்வாறு பிரித்துக் காட்டப்படாது ஒரே அமைப்பாக உருவாக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

பல்லவர்களது குடைவரைக் கோயில் பொதுவாகக் கருவறையுடன் மண்டபத்தையும் கொண்டதாக இருக்கும். முற்றம் அல்லது முன் மண்டபம் அமைக்கப் படாத பல்லவர்களது குடைவரைக் கோயில்களில் இது ஒன்று.



# 12. மண்டகப்பட்டு குடைவரைக் கோயில்

செஞ்சியினின்றும் விழுப்புரம் செல்லும் பெரு வழியில் முட்டத்தூர் என்ற ஊரை அடுத்து மண்டகப் பட்டு செல்லும் பிரிவு உள்ளது. பெருவழியினின்றும் சுமார் ½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மண்டகப் பட்டு என்ற ஊருக்கு வெளியில் உள்ள மலையில் வடக்கு நோக்கி குடைவரை உருவாக்கப்பட்டுள்ளது.

குடைவரை கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. இரண்டு வரிசைத் தூண்கள், அரைத்தூண்கள் குடைவரையை அர்த்த மண்டபம், முகமண்டபம் என்று பகுத்துக் காட்டுகின்றன. முதல் வரிசை நான்கு தூண்களையும், இரண்டு அரைத்தூண்களையும் கொண்டது. தூண்கள் பருமனாக இருப்பதுடன், மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டைகொண்டதாகவும் உருவாக்கப் பட்டுள்ளன. இவற்றிற்கு இடையில் வட்டமாகப் போதிகைகள் காணப்படுகின்றன. தூண்களுக்கு மேல் பகுதியில் பலகை போன்ற அமைப்பு உள்ளது. கடைசியாக அமைந்துள்ள தூண்களுக்கும் அரைத் தூண்களுக்கும் இடையில் உள்ள புரைகளில் இரு வாயிற் காப்போர் செதுக்கப்பட்டுள்ளனர். இவர்கள் பிற் காலத்தில் உருவாக்கப்பட்டவர்கள் என்று கருதப் படுகிறது.

கீழ்புறமாக உள்ள வாயிற் காப்போன் திரிபங்க நிலையில் நின்றபடி அமைக்கப்பட்டுள்ளான். தலையில் நீண்ட கிரீடம் காணப்பட, அவனது இரு கைகளில் வலக்கை இடது அக்குளிலும், இடக்கை தொங்கிய நிலையிலும் உள்ளன. மேல் புறமாக உள்ளவன் சமபங்க நிலையில் நின்றபடி உள்ளான். அவனது இரு கைகளில் வலக்கை கடிமுத்திரையிலும், இடக்கை கதையிலும்

காணப்படுகின்றன. அவனது கதையைச் சுற்றி, பாம்பு அமைக்கப்பட்டுள்ளது அவனது தலை மீதும் நீண்ட கிரீடம் உருவாக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது வரிசை இரண்டுதூண்கள், இரண்டு அரைத்தூண்கள் ஆகியவற்றைக் கொண்டது. இந்த வரிசையில் தூண்கள் மட்டும் மேலும் கீழும் சதுரங் களாகவும், நடுவில் எட்டுப்பட்டை கொண்டதாகவும் பகுக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு இடையில் வட்டமான போதிகைகள் காணப்படுகின்றன.

குடைவரையின் பின் சுவரில் மூன்று கருவறைகள் உருவாக்கப்பட்டுள்ளன. கருவறைகளில் முகப்புகள் இரண்டு அரைத்தூண்களைக் கொண்டன. நடுவில் உள்ள கருவறையின் அரைத்தூண்கள் மட்டும் பகுக்கப்பட்டு உள்ளன. இவற்றிற்கு நடுவில் உள்ள போதிகைகள் வட்டமான வடிவைக் கொண்டன. கருவறைகளின் உள்ளே இறைவனின் திருவுருவங்கள் வைக்கக் குழிகள் காணப்படுகின்றன.

முகப்பின் மேல் புறமாக உள்ள அரைத்தூணில் விசித்திர சித்தன் என்ற மன்னனின் கல்வெட்டு காணப் படுகிறது. அதில் திருமூர்த்திகளுக்குச் செங்கல், மரம், இரும்பு, சுண்ணாம்பு இன்றி, கோயில் எழுப்பியதாக அந்த மன்னன் பெருமிதத்துடன் குறிப்பிட்டுள்ளான்.

பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திர வர்மன் கி. பி. 610 முதல் 640 வரை பல்லவ அரியணையை அலங்கரித்தவன். அவனது பல பட்டப் பெயர்களில் விசித்திர சித்தன் என்பதும் ஒன்று. அதாவது வினோதமான மனதைக் கொண்டவன் என்பது பொருள். அதனால்தான் அவன் மூலமும் நடுவும் அற்ற இறை வனுக்குக் காலத்தால் அழியாக் கோயில்களைக் கட்ட எண்ணங் கொண்டான் போலும். அதன் விளைவு அக் காலத்தில் பாதாமி என்ற இடத்தில் மேலைச் சாளுக்கி

யர்கள் உருவாக்கிய குடைவரைக் கோயில்களைப்பின் பற்றித் தமிழகத்தில் அத்தகு குடைவரைக் கோயில் களைத் தோற்றுவித்தான். அவனது முதற் குடைவரைக் கோயில்தான் மண்டகப்பட்டில் உள்ளது;

அவனது கல்வெட்டினின்றும் இது பிரமா, திருமால், சிவபெருமான் என்ற மும்மூர்த்திகளுக்கு ஏற்பட்டது என்பது தெரியவருகிறது. மேலும் அவனது காலத்திற்கு முன்பு திருக்கோயில்கள் மரம், செங்கல் போன்ற வற்றால் கட்டப் பட்டதாகவும் உணரப்படுகிறது. இதைத் தொடர்ந்து தமிழகத்தில் மாமல்லபுரம் உட்பட 100க்கு மேற்பட்ட குடைவரைக் கோயில்களும் மலை தளிகளும் உருவாக்கப்பெற்றன; அதன் பின் கற்றளிகள் கட்டப்பெற்றன; இவ்வாறாக, திருக்கோயில்களின் வளர்ச்சியில் முதற்கட்டமாக அமைந்துள்ள குடைவரைக் கோயில்களில் இது முதலாவது என்னும் பெருமையைக் கொண்டதாம்;

மும்மூர்த்திகளுக்கு இது உருவாக்கப்பட்டது; எனவே பிரமீசுவர விஷ்ணு லக்ஷித குடைவரைக் கோயில் என்று அழைக்கப்பெறுகிறது;



# 13. மேலச் சேரி குடைவரைக் கோயில்

செஞ்சியினின்றும் மேல் மலையனூர் செல்லும் வழியில் சிங்காவரத்தினின்றும் ஒரு கிலோ மீட்டர் தொலைவில் மேலச்சேரி என்ற ஊர் உள்ளது. ஊரினின்றும் சுமார் ½ கிலோ மீட்டர் தொலைவில் மலைகள் பல காணப்படுகின்றன. அவற்றில் ஒன்றில் மேற்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டு உள்ளது. இதை ஒட்டி பிற்காலத்தில் மகாமண்டபம், ஆகியவை கட்டப்பட்டுள்ளன. மகாமண்டபத்தில் வடக்கு நோக்கி பாறையில் புடைசிற்பமாக செதுக்கப் பட்ட பிள்ளையார் காணப்படுகிறார்.

குடைவரை முகப்பு மற்றும் அர்த்தமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. முகப்பில் இரண்டு தூண்கள் மற்றும் இரண்டு அரைத்தூண்கள் உள்ளன. இங்குள்ள தூண்களை மகேந்திரவர்மன் காலத்திய ஏனைய தூண்களைப் போன்று மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப்பட்டையாகவும் பகுக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தூண்கள் மற்றும் அரைத் தூண்களுக்கு இடையில் கோணவடிவில் போதிகை அமைக்கப்பட்டுள்ளது.

கருவறையில் பாறையிலேயே இலிங்கத் திருவுரு உருவாக்கப்பட்டுள்ளது. இராச சிம்மப் பல்லவன் காலம் வரையில் பல்லவர்களது குடைவரைக் கோயில் களில் இறைவன் திருவுரு அவற்றின் ஒரு . பகுதியாக அமைக்கும் மரபு இல்லை. இவற்றினின்றும் வேறுபட்டு இங்கு இலிங்கத் திருவுரு குடைவரையின் ஒரு பாகமாக உருவாக்கப்பட்டுள்ளது. இதன் தனிச்சிறப்பாகும். எட்டுப்பட்டை கொண்ட ஆவுடையார் மேல் அமைந்துள்ள இறைவனின் திருப்பெயர் மத்தளேசுவரர்

என்பதாம். இலிங்கத் திருவுருவின் மேல் தாமரை மலர் செதுக்கப்பட்டுள்ளது.

அர்த்த மண்டபத்தில் தெற்கு நோக்கி அன்னை புடைசிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளாள். இருவாசியுடன் அமைந்துள்ள அன்னை பிற்காலத்ததாகக் கருதப்படு கிறது. அன்னையின் திருப்பெயர் பிரஹந்நாயகி என்பதாம். அன்னையை இறைவனுடன் அமைத்தால், இரண்டுகைகள் இருக்கவேண்டும் ; தனியாக இருந்தால், நான்கு கைகள் இருக்க வேண்டும் என்பது ஆகமங்களில் காணப்படும் விதிகளாம். இங்கு அன்னை தனியாக இருப்பினும், இருகைகள் தான் உருவாக்கப் பட்டுள்ளன, வலக்கையில் தாமரை மலர் காணப்பட, இடக்கை கீழ்த்ய வலம்பித முத்திரையில் உள்ளது. திரிபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் உள்ள இவளது தலையை நீண்ட கிரீடம் அழகு செய்கிறது. இவளது காதுகளில் அணிந்துள்ள காதணிகள் எழில் மிக்கனவாக உள்ளன. கருணை ததும்பும் முகப்பொலிவுடன் கூடிய அன்னை காண்போர் கண்களை விட்டகலா வனப்புடன் தலை வடிவமாகத் திகழ்கிறாள்.

தென்புறமாக உள்ள தூணில் சந்திராதித்தியன் என்பவனின் கல்வெட்டு பல்லவ கிரந்த எழுத்தில் காணப்படுகிறது. அதில் இந்தக் குடைவரை உள்ள ஊரின் பெயர் சிங்கபுரம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சிங்கபுரம் என்பது அடுத்துள்ள சிங்காவரம் என்றும், சந்திராதித்தியன் என்பவன் பல்லவ அரச பரம் பரையைச் சார்ந்தவனாக இருக்கலாம் என்றும் கருதப் படுகிறது.

இது ஸ்ரீசிகரிபல்லவேசுவரம் என்ற பெயரில் அழைக்கப்பெறுகிறது.

# 14. தளவனூர் குடைவரைக்கோயில்

செஞ்சியினின்றும் விழுப்புரம் செல்லும் வழியில் பால்பட்டு என்ற ஊரை அடுத்து கல்லாளிப்பட்டு செல்லும் பிரிவில் சென்றால் தென்புதுக்குடி வழியாகத் தளவனூரை அடையலாம். ஊரினின்றும் ½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ளமலையில் இயற்கையாக அமைந்து உள்ள பெரிய சரிவில் தெற்கு நோக்கி குடைவரை உருவாக்கப்பட்டுள்ளது. மகேந்திரவர்மன் காலத்திய இந்தக் குடைவரை அவனது பல பட்டப்பெயர்களில் ஒன்றான சத்ருமல்லன் என்ற பெயரில் சத்ருமல்லன் குடைவரைக் கோயில் என்று அழைக்கப்பெறுகிறது.

இதன் முகப்பில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் காணப்படுகின்றன. தூண்கள் மட்டும் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப்பட்டை கொண்டனவாகச் செதுக்கப்பட்டுள்ளன. சதுரங்களில் மட்டும் தாமரை இதழ்கள் உருவாக்கப்பட்டுள்ளன. தூண்கள் மற்றும் அரைத்தூண்களுக்கு இடையில் வட்டமான போதிகைகள் உள்ளன. அரைத்தூண்களை ஒட்டிய புரைகளில் வாயிற் காப்போர் இருவர் காணப் படுகின்றனர்.

வலப்புறம் சமபங்க நிலையில் நின்றுள்ள வாயிற் காப்போரின் இரண்டு கைகளில் வலக்கை ஊருமுத்திரை யிலும், இடக்கை வணக்கத்தைக் குறிக்கும் வகையில் மேலே தூக்கிய நிலையிலும் அமைக்கப்பட்டுள்ளன. நேரான பார்வையை உடைய இவரது தலையில் கிரீடம் தனி அமைப்பைக் கொண்டதாகக் காணப்படுகிறது. இடப்புறம் உள்ள வாயிற் காப்போர் திரிபங்க நிலையில் நின்றுள்ளான். அவனது வலக்கை கத்பவலம்பித

முத்திரையிலும், இடக்கை ஊருமுத்திரையிலும் அமைக்கப்பட்டுள்ளனர்.

முகப்பில் தூண்கள் மற்றும் அரைத் தூண்களுக்கு மேல் கபோதம் உருவாக்கப்பட்டுள்ளது. அதில் பல்லவ பாணியில் கூடுகள் ஐந்து காணப்படுகின்றன. அவற்றில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கந்தர்வர் தலை செதுக்கப்பட்டுள்ளது. இத்தகைய அமைப்பு மாமல்லபுரத்திற்கு வெளியில் வேறு எந்தக் குடைவரைக் கோயிலிலும் இல்லாதது இதன் தனிச் சிறப்பாகும். இங்கு கபோதத்தில் 5 பேர்கள் தலைகள் உள்ளதாலும், ஐந்து என்ற எது இருந்தாலும் அதைப் பஞ்ச பாண்டவருடன் தொடர்புபடுத்திக் கூறுவது மக்கள் வழக்கமாதலாலும், இந்தக் குடைவரையை இங்குள்ள மக்கள் பஞ்ச பாண்டவர் கோயில் என்று அழைக்கிறார்கள். தூண்களுக்கும் கபோதத்திற்கும் இடையில் மகரதோரணங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் நடுவிலும் கந்தர்வர்கள் காணப்படுகின்றனர். இத்தகைய அமைப்பு வேறு எந்தக் குடைவரைக் கோயிலிலும் காணப்படாதது இதன் மற்றுமொரு தனிச்சிறப்பு என்பது குறிப்பிடத்தக்கது.

குடைவரையின் உள்ளே கிழக்கு நோக்கிக் கருவறை அமைந்துள்ளது. அதற்கு முன்னால் முகப்பு காணப்படுகிறது. கருவறையின் உள்ளே வட்டமான ஆவுடையாருடன் இலிங்கத் திருவுரு உள்ளது. இது பாறையில் அமைந்தது அல்ல, தனியாக வைக்கப்பட்டுள்ளது. கருவறையின் முகப்பு இரண்டு பருமனான தூண்களைக் கொண்டது. அவை மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டையாகவும் பகுக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு இடையில் உள்ள போதிகை வட்டமான வடிவைக் கொண்டது. முகப்பிற்கு முன்னால் முக மண்டபம் ஒன்று உள்ளது. இத்தகைய முகப்புடன் கூடிய கருவறை அமைப்பு மாமல்லபுரத்தில்

மகிஷாமர்த்தினி குடைவரைக் கோயிலிலும், திருச்சி கீழ்க்குடைவரைக் கோயிலிலும் காணப்படுகிறது.

கருவறைக்கு இருபுறமும் இருவாயிற்காப்போர் உள்ளனர். இருவரும் நேரான பார்வை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். வலப்புறம் உள்ளவரின் வலக்கை கடிமுத்திரையிலும், இடக்கை தூக்கிய நிலையிலும் இருக்க, இடப்புறம் உள்ளவரின் இடக்கை கடிமுத்திரையிலும், வலக்கை தூக்கிய நிலையிலும் உள்ளன.

மலைக்கு மேல் இரண்டு சமணர்களின் படுக்கைகள் உள்ளன. இங்கு முற்காலத்தில் சமணர்கள் தங்கியிருந்ததை இது சுட்டிக்காட்டுகிறது.

இங்குள்ள கல்வெட்டு ஒன்றினின்றும் இது சத்ருமல்லன் என்ற நரேந்திரன் என்னும் அரசனால் அமைக்கப்பெற்றதாகத் தெரிகிறது. இதன் பெயர் ''சத்ருமல்லேசுவராலயம்'' எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.



# 15. சிங்காவரம் குடைவரைக் கோயில்

செஞ்சியினின்றும் மேல்மலையனூர் செல்லும் வழியில் உள்ள சிங்காவரம் என்ற ஊரை அடுத்துள்ள மலையில் சற்று உயரத்தில் கிழக்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது. இது இரண்டு வரிசை தூண்கள் மற்றும் அரைத் தூண்களையும், அர்த்த மண்டபத்தையும், நீண்ட கருவறையையும் கொண்டது.

முகப்பில் உள்ள இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப்பட்டையாகவும் பகுக்கப்பட்டுள்ளன. சதுர அமைப்புகளில் தாமரை இதழ்கள் செதுக்கப்பட்டுள்ளன. அரைத்தூண்களை ஒட்டி வாயிற்காப்போர் இருவர் காணப்படுகின்றனர். அவர்களது இருகைகளில் ஒரு கை கடிமுத்திரையிலும், மற்றொரு கை வணக்கத்தைக் குறிக்கத் தூக்கிய நிலையிலும் உள்ளன. இரண்டாவது வரிசையில் உள்ள இரண்டு தூண்கள் மட்டும் முதல் வரிசையில் உள்ளவை போன்று பகுக்கப்பட்டுள்ளன. தூண்கள் மற்றும் அரைத்தூண்களுக்கு இடையில் கோண வடிவில் போதிகைகள் காணப்படுகின்றன. தூண்களின் சதுர அமைப்புகளில் தாமரை இதழ்கள் உள்ளன. அரைத் தூண்களை ஒட்டி இரு பெண் அன்பர்கள் திரிபங்க நிலையில் நின்றபடி அமைக்கப்பட்டுள்ளனர்.

குடைவரையை ஒட்டி பிற்காலத்தில் முகமண்டபம், திருச்சுற்று மற்றும் கோபுரம் ஆகியவை கட்டப் பட்டுள்ளன.

நீண்ட அமைப்பினைக் கொண்ட கருவறையில் பாற்கடலில் பள்ளி கொண்ட பரமபுருடனாம் திருமால்

தனக்கே உரிய சயனத் திருக்கோலத்தில் 5 தலை ஆதிசேடன் மீது உருவாக்கப்பட்டுள்ளான். அவனது தலை தெற்கிலும், கால் வடக்கிலும் இருக்க, முகம் மேல் நோக்கிக் காணப்படுகிறது. வைணவர்கள் கோயில் என்று வணங்கும் திருவரங்கத்தில் அரங்கநாதன் தன் அன்பர்களை நோக்கியபடி படுத்துள்ளான். இதைத் தொண்டரடிப் பொடியாழ்வார்,

"குடதிசை முடியைவைத்து குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டி தென்திசை யிலங்கை நோக்கி
கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமாக் கண்டு
உடல் எனக்கு உருகுமாலோ என் செய்கேன் உலகத்தீரே [திருமலை-19]

என்று அருளியுள்ளார். ஆனால் இங்கு திருமகள் கேள்வன் மேலே நோக்கியபடி படுத்துள்ளான். எனவே இதை "யோக சயனம்" என்று கூறுகிறார்கள். இத்தகு உறக்கத்தை "யோகு துயில் கொண்ட பரம்பரனே" எனப் பெரியாழ்வாரும், "யோகத் துறக்கத்தை" என மங்கை மன்னனும், "உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை" என நம்மாழ்வாரும் சிறப்பித்துள்ளனர். இத்தகைய வடிவங்களில் ஒரு கை அண்ணலின் தலைக்குக் கீழ் அல்லது அருகில் மடித்த நிலையில் இருக்கும். ஆனால் இங்கு வலக்கை தொங்கிய நிலையிலும், இடக்கை மேலே தூக்கிய நிலையிலும் காணப்படுகின்றன. கருவறையின் பின் சுவற்றில் கந்தர்வர்கள், நாபிக் கமலத்தில் பிரமா, கருடன், மதுகைடபர் ஆகியோர் அமைக்கப்பட்டுள்ளனர். மதுகைடபரை இங்கு திருமாலின் வாயிற்காப்போரான ஜய, விஜயர் என்று கூறுகின்றனர். திருமாலின் சயனக் கோலத்தில் மதுகைடபர்களைத்தான் அமைப்பது மரபே தவிர, ஜய, விஜயர்களை உருவாக்குவதில்லை

என்பது குறிப்பிடத்தக்கது. எனவே இவர்களை மதுகைடயர் என்று கொள்வதே பொருத்தமாகத்தோன்று கிறது. இவனது திருவடிக்குக்கீழ் மண்மகளும் முழங்கால் அருகில் அன்பன் பிரகலாதனும் காணப்படுகின்றனர். இவனது தலைக்கு மேல் சக்கரமும், மார்பில் உட்கார்ந்த நிலையில் திருமகளும் உருவாக்கப்பட்டுள்ளனர். இவனுக்கு எதிரில் உள்ள பாறையில் கையில் சாட்டையுடன் ஒரு வடிவம் காணப்படுகிறது. இதை நாரதர் என இங்கு சொல்லப்படுகிறது. நாரத முனிவர் என்றால் முகத்தில் தாடி இருக்க வேண்டும். இந்த வடிவின் முகத்தில் தாடி இல்லை; தலையில் கிரீடம் போன்ற அமைப்பு காணப்படுகிறது. இது என்ன வடிவம் என்பது தெரியவில்லை. அரங்கநாதனைச் சுற்றி பரிவார தெய்வ வடிவங்கள் ஒருசிலதான் இருப்பதால், இதை மத்திம வகுப்பைச் சார்ந்ததாகக் கருதலாம்.

குடைவரைக்கு வெளிப்புறம் தென்புறத்தில் சற்று கீழே உள்ள பாறையை ஒட்டி தாயார் திருமுன் கட்டப்பட்டுள்ளது. அங்குள்ள பாறையில் துர்க்கையின் வடிவம் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளது. இடக்கால் தரையில் ஊன்றி இருக்க, வலக்கால் தூக்கிய நிலையில் மகிடாசுரன் தலைமீது வைக்கப்பட்டுள்ளது. இவளது நான்கு கைகளில் முன் வலக்கை கடிமுத்திரையிலும், முன் இடக்கை ஊரு முத்திரையிலும் இருக்க, பின் இடக்கையில் சங்கும், பின் வலக்கையில் சக்கரம் எதிரி மீது செலுத்தும் நிலையிலும் (பிரயோக சக்கரம்) காணப்படுகின்றன. இவளுக்கு இருபுறமும் இரு அன்பர்கள் உள்ளனர். அவர்களில் தென்புறம் உள்ளவர் கையில் கத்தி காணப்படுவது துர்க்கைக்கு அக்காலத்தில் பலி கொடுக்கும் வழக்கம் இருந்ததை உறுதிப்படுத்துகிறது. துர்க்கையின் வடிவம் கலை அழகுடன் உருவாக்கப்பட்டுள்ளது கண்டு களிக்கத்தக்கதாம். திருமாலுக்கு உரிய குடைவரைக் கோயிலில் துர்க்கை இருப்பது இதன் தனிச் சிறப்பாகும். துர்க்கை

திருமாலின் தங்கை எனக் கருதப்படுவதால், துர்க்கையை இங்கு அமைத்தனர் போலும்.

இங்குள்ள அரங்கநாதரை அருகில் உள்ள செஞ்சியுடன் தொடர்புபடுத்தி செஞ்சி அரங்கநாதர் என்று அழைக்கின்றனர். மேலும் செஞ்சியைத் தலைநகராகக் கொண்டு, ஆற்காடு நவாபுடன் போரிட்ட சிற்றரசனான தேசிங்குராசனை இங்குள்ள அரங்கநாதருடன் தொடர்பு படுத்தி செவிவழிச் செய்திகள் பல நிலவுகின்றன.

இங்குள்ள கல்வெட்டு ஒன்றில் இங்கு எழுந்தருளியுள்ள இறைவனின் திருப்பெயர் திருப்பன்றிக் குன்று எம்பெருமான் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு அரங்கநாதர் மூலவராக எழுந்தருளியிருப்பதால், இது அரங்கநாதர் குடைவரைக்கோயில் என அழைக்கப் பெறுகிறது.

———

# 16. தான்தோன்றிமலை குடைவரைக் கோயில்

கரூருக்குத் தெற்கே மூன்று கிலோமீட்டர் தொலைவில் தான்தோன்றிமலை உள்ளது. ஒரு சில படிகள் கொண்ட சிறிய மலை இது. இங்குள்ள குடைவரைக் கோயில் உள்ள புடை சிற்பம் தானாகத் தோன்றியது எனக் கருதப்படுவதால், இந்த மலை தான் தோன்றிமலை எனப் பெயர் வழங்கி வருவதாகச் சொல்லப்படுகிறது.

குடைவரை கருவறையை மட்டும் கொண்டது இதன் முகப்பில் தூண்கள் அல்லது அரைத்தூண்கள் கிடையாது. முகப்பின் வாயிலில் இருபுறமும் புடை சிற்பமாக உள்ள வாயிற்காப்போர் இரு கைகளுடன் காணப்படுகின்றனர். இவர்கள் நல்ல முறையில் உருவாக்கப்படவில்லை. முகப்பின் மேற்றளத்தில் பூதகணவரிசை அமைக்கப்பட்டுள்ளது.

கருவறையில் சதுரம், எட்டுப்பட்டை எனப் பகுக்கப்படாத இரு தூண்கள் உள்ளன. அவையும் சரிவர செதுக்கப்படவில்லை. கருவறையின் பின் சுவற்றில் சுமார் ஆறு அடி உயரம் உள்ள உருவம் புடை சிற்பமாகக் காணப்படுகிறது. அதன் முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை ஊரு முத்திரை யிலும் உள்ளன. பின் இருகைகளில் படைக்கலங்கள் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.

இங்குள்ள மூலவரைப் பற்றி பின்வரும் செவிவழிச் செய்தி நிலவுகிறது. பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சதாசிவ பிரமேந்திரர் என்பவர் இந்த வடிவை முருகனாகக் கொண்டு வழிபட்டு வந்தார். இவரால்

யந்திர தாபனம் செய்யப்பட்டபின், இந்தத் திருவுரு விற்கு சிறப்பு ஏற்படலாயிற்று. பிற்காலத்தில் இதைப் பெருமானாக்கி, தான்தோன்றிப் பெருமாள், சீனிவாசப் பெருமாள், வெங்கட்டரமணசாமி எனப் பெயர்கள் இட்டு, அதை உறுதிப்படுத்த கருடன், அநுமன் ஆகிய உருவங்களையும் இங்கு அமைந்து விட்டனர்.

திருமால் கோயில்களில் பூதகண வரிசையை அமைக்கும் மரபு இல்லை. சிவபெருமானுக்குத்தான் பூதகணங்களுடன் தொடர்பு உண்டு, 'பூதப்படையாள் புனிதா போற்றி'' என்பது அப்பர் பெருமானது திருவாக்காம். எனவே இங்கு முகப்பில் உருவாக்கப் பட்டுள்ள பூதகண வரிசை செவிவழிச் செய்தியை உறுதிப்படுத்துவதாக உள்ளது.

———

# 17. குன்னாண்டார் கோயில் குடைவரைக் கோயில்கள்

திருச்சி - புதுக்கோட்டை பெருவழியில் உள்ள கீரனூரினின்றும் சுமார் 13 கிலோமீட்டர் தொலைவில் குன்னாண்டார் கோயில் என்ற சிற்றூர் உள்ளது. புதுக்கோட்டையினின்றும் சென்று வர பேருந்து வசதி உள்ளது. இங்குள்ள மலையில் கிழக்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது. இதற்கு வடபுறமும், தென்புறமும் இரு குடைவரைக்கோயில்கள் சிறிய அளவில் முற்றுப் பெறாத நிலையில் உள்ளன.

நடுவில் அமையப்பெற்றுள்ள குடைவரைக் கோயில் கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. இதன் முகப்பில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத் தூண்களும் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டையுடனும் உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு இடையில் நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகைகள் உள்ளன. தூண்களும் அரைத்தூண்களும் மகேந்திரவர்மன் பாணியில் பருமனாக உருவாக்கப் பட்டுள்ளன. குடைவரைக் கோயிலை ஒட்டி முக மண்டபம் ஆகிய அமைப்புகள் பிற்காலத்தில் கட்டப் பட்டுள்ளன.

கிழக்கு நோக்கி உருவாக்கப்பட்டுள்ள கருவறையில் பாறையிலேயே இலிங்கம் அமைக்கப்பட்டுள்ளது. இதனுடைய ஆவுடையார் எட்டுப்பட்டை கொண்டதாக உள்ளது. இதன் திருப்பெயர் பர்வதகிரீசுவரர் என்பதாம். நுழைவாயிலுக்கு இருபுறமும் வாயிற் காப்போர் இருவர் காணப்படுகின்றனர். திரிபங்க நிலையில் நிற்கும் வலப்புறம் உள்ளவர் தலையில் கிரீடம் காணப்பட, அவரது வலக்கையில் பாம்பு சுற்றிய

கதை அமைக்கப்பட்டுள்ளது; இடப்புறம் உள்ளவர் தலையைத் தலைப்பாகை போன்ற அமைப்பு அணி செய்ய, அவர் தன் இரு கைகளையும் மார்பில் கட்டியபடி உருவாக்கப்பட்டுள்ளார்.

மண்டபத்தில் தென்புறம் வலம்புரி பிள்ளையார் நான்கு கைகளுடன் புடை சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளான். அவனது துதிக்கையில் அவனுக்கு விருப்பமான மோதகம் காணப்படுகிறது. இவனுக்கு எதிரில் உமையுடன் கூடிய சிவபெருமான் புடைசிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளான். இருவரும் உத்குடி இருக்கையில் உட்கார்ந்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளனர். சிவபெருமானின் தலையை சடாமகுடம் அணிசெய்ய, அதிக அணிகலன்களால் அவன் அழகு செய்யப்படவில்லை. இது அக்கால மரபிற்கு ஏற்றதாக உள்ளது; இவனது நான்கு கைகளில் முன் வலக்கை முப்புரி நூலைப் பிடித்த நிலையிலும், முன் இடக்கை தொடை மீதும், பின் இடக்கையில் மழுவும், பின் வலக்கை சடையைப் பிடித்த நிலையிலும் காணப்படுகின்றன. பொதுவாக சிவபெருமானின் பின் வலக்கையில் மழுவும், பின் இடக்கையில் மானும் தான் அமைக்கப்பட்டிருக்கும். இங்கு அதினின்றும் வேறுபட்டு, பின் இடக்கையில் மழு உள்ளது, அன்னையின் இருகைகளில் வலக்கையில் மலரும், இடக்கை தொடைமீதும் உள்ளன. இவர்கள் இருவரும் உட்கார்ந்துள்ள நிலை இத்தகு வடிவங்கள் பிரான்மலை மற்றும் திருமலை குடைவரைக் கோயில்களில் உட்கார்ந்துள்ள நிலையினின்றும் வேறுபட்டுள்ளது. பிரான்மலை குடைவரைக் கோயிலில் அண்ணல் சுகாசனத்திலும், அன்னை உத்குடி இருக்கையிலும் (ஒரு கால் தொங்கிய நிலை) உருவாக்கப்பட்டுள்ளனர். திருமலை குடைவரைக் கோயிலில் இருவரது ஒரு கால் குத்திட்டும், மற்றொரு கால் தொங்கிய நிலையிலும் அமைக்கப்பட்டுள்ளனர்

ஆனால் இங்கு இருவரது ஒரு கால் குத்திட்டும், மற்றொரு கால் இருக்கைமீது படுக்கையாகக் காணப்படு கின்றன. மேலும் இங்கு இவர்கள் இருவருடன் சேடி ஒருத்தி அன்னைக்கு அருகில் அமைக்கப்பட்டுள்ளது வேறு எந்தக் குடைவரைக் கோயிலிலும் இல்லாத ஒன்றாம்.

முற்றுப் பெறாத இரு குடைவரைக்கோயில்களின் முகப்பு இரு தூண்களைக் கொண்டதாகும். வடபுறமாக உள்ள முற்றுப் பெறாத குடைவரைக் கோயிலின் வடபுறச் சுவரில் சண்டிகேசுவரர் வடிவம் அமைக்கப் பட்டுள்ளது. சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள இவரது இரு கைகளில் வலக்கையில் மழுவும், இடக்கை தொடை மீதும் உள்ளன.

இங்கு பல்லவ, சோழ, பாண்டிய, விசய நகர மன்னர்களின் கல்வெட்டுகள் உள்ளன. கி. பி. 775 முதல் 826 வரை பல்லவ அரியணையை அலங்கரித்த தந்திவர்மனின் 5ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு மாற்பிடுகு பேரதியரையன் வேளையாளனான வலிவடுகன் என்ற கலிமூர்க்க இளவரையன் வலிஏரி என்ற ஏரியை வெட்டுவித்த செய்தியைக் கூறுகிறது. தந்திவர்மனது மகனும், கி. பி. 826 முதல் 849 வரை செங்கோலோச்சிய மூன்றாம் நந்திவர்மப் பல்லவனது 3ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு ஒன்று குடைவரைக் கோயிலின் வடக்கு மூலையில் பொறிக்கப்பட்டுள்ளது. அதினின்றும் வடுவூரைச் சேர்ந்த கண்வதிமான் என்ற பகைச் சந்திர விசயரையன் 100 நபர்களுக்கு திருவாதிரை நாளன்று அன்னம் அளிக்க 200 நாழி அரிசி அளித்தமை தெரிய வருகிறது. பல்லவ மன்னர்களது இந்த இரண்டு கல்வெட்டுகளினின்றும் பல்லவ அரசு தெற்கில் எதுவரை பரவி இருந்தது என்பது தெளிவாகிறது.

பனங்காடு நாட்டில் குடி இருப்பவர்கள் நாள் வயலூரில் உள்ள விளை நிலங்கள் அல்லது பெருவழி ஆகிய இவற்றிற்குத் தீங்கு ஏற்படுத்தினால், அபராதமாக ஒரு மா நிலத்தை கோயிலுக்குக் கொடுக்க வேண்டும் என்று முடிவு செய்ததை இராசராசனின் மூன்றாவது ஆட்சி ஆண்டு கல்வெட்டால் அறிய முடிகிறது. கி. பி. 1178 முதல் 1216 வரை சோழப் பேரரசனாக விளங்கிய மூன்றாம் குலோத்துங்க சோழனில் கல்வெட்டு கோயில் வாத்யமாராயனுக்கு நிலம் அளித்த செய்தியைக் கூறுகிறது. சுந்தரபாண்டியன் சந்நிதிக்குப் பணம் நிவந்தமாக அளிக்கப்பட்டதை திரிபுவனச் சக்ரவர்த்தி கோனேரிமை கொண்டான் என்ற மன்னனுடைய 14ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டினின்றும் தெரிய வருகிறது. இரந்து மலைநாட்டு அரையர்கள் தங்களுக்குள் நடக்கும் சண்டையின்போது தங்களால் பாதுகாக்கப்படும் வேளாண் மக்களுக்கும் ஏனை யோருக்கும் தீங்கு செய்ய மாட்டோம் என்றும், ஒருவருக்குத் தீங்கு ஏற்பட்டால் 100 பணமும், ஒரு கிராமம் அழிக்கப்பட்டால் 500 பணமும் அபராதம் செலுத்துவதாகவும் குன்னாண்டார் கோயில் கிராம அலுவலருக்கு உடன்பட்டதை சடாவர்மன் சுந்தர பாண்டிய தேவனின் 12ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு கூறுகிறது. அழகிய சோழநாடாள்வான் என்பான் நடன மண்டபத்தையும், மற்றொரு மண்டபத்தையும் கட்டியதை மற்றொரு கல்வெட்டால் அறிய இயலு கிறது. விசய நகர மன்னன் இரண்டாம் விரண்ண உடையார் என்ற முதலாம் விருபாட்சனின் கல்வெட்டு சிதைந்து போன கோயிலின் வடக்கு சுவரை நடனப் பெண் ஒருவள் திருப்பணி செய்தமையைத் தெரிவிக் கிறது. மல்லிகார்ச்சுன விருபாட்சராயன் என்ற விசய நகர மன்னன் கல்வெட்டு இங்குள்ள இறைவனது திருப்பெயர் குன்றக்குடி உடைய நாயனார் என்றும், இந்தக் கோயில் சயசிங்க குல காலவள நாட்டில்

அமைந்துள்ளதாகவும் கூறுகிறது. இவற்றினின்றும் மன்னர்கள் மட்டுமன்றி மக்களும் கோயில் திருப்பணிகளில் கொண்டிருந்த ஆர்வம் மற்றும் அக்கால சமூக நிலை ஆகியவற்றை அறியலாம்.

பல்லவ மன்னர்களது கல்வெட்டுகளைக் கொண்டு இந்தக் கோயிலின் காலத்தை எட்டாம் நூற்றாண்டாகக் கொள்ளலாம்.



# 18. மலையடிப்பட்டி குடைவரைக் கோயில்கள்

புதுக்கோட்டை மாவட்டம் கீரனூரினின்றும் கிள்ளுக்கோட்டை செல்லும் வழியில் கீரனூரினின்றும் சுமார் 16 கிலோ மீட்டர் தொலைவில் மலையடிப்பட்டி என்ற சிற்றூர் உள்ளது. குன்னாண்டார் கோயிலி னின்றும் இந்த ஊர் சுமார் 12 கிலோமீட்டர் தொலை வாகும். பரத்வாஜ ஆசிரமம் என்றும் அழைக்கப்பெறும் இந்த ஊரில் உள்ள திருவாலந்தூர் எனப்படும் மலையில் இரண்டு குடைவரைக் கோயில்கள் உருவாக்கப் பட்டுள்ளன. ஒன்று சிவபெருமானுக்கும், மற்றொன்று திருமாலுக்கும் உரியன.

சிவபெருமானின் கருவறை வடக்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ளது. இது கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. இதன் முகப்பில் இரண்டு தூண்களும் இரண்டு அரைத் தூண்களும் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டையுடனும் உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு இடையில் கோண வடிவான போதிகைகள் காணப்படுகின்றன. தூண்களும் அரைத்தூண்களும் மகேந்திரவர்மன் பாணியைப் பின் பற்றிப் பருமனான தோற்றத்தை உடையனவாக அமைக்கப்பட்டுள்ளன. முகப்பிற்கு பின்னால் கருவறையின் வடபுற சுவருக்கு எதிரில் தெற்கு நோக்கி சண்டிகேசுவரர் வடிவம் உள்ளது. சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள இவரது இருகைகளில் வலக்கையில் மழு நல்ல முறையில் அமைக்கப்பட்டுள்ளது.

மேற்கு நோக்கி உருவாக்கப்பட்டுள்ள கருவறையின் அதிட்டானம் வரி, வரிமானம், முப்பட்டைக் குமுதம் ஆகியவற்றைக் கொண்டது. பாறையிலேயே வட்டமான ஆவுடையாருடன் இலிங்கத் திருவுரு அமைக்கப்

பட்டுள்ளது. இறைவனது திருப்பெயர் வாகீசுவரர் என்பதாம். கருவறையின் நுழைவாயிலுக்கு இருபுறமும் இரு கைகள் கொண்ட வாயிற் காப்போர் இருவர் காணப்படுகின்றனர். திரிபங்க நிலையில் நிற்கும் இவர்களது ஒரு கையில் பாம்பு சுற்றிய கதை அமைக்கப் பட்டுள்ளது. இவர்களது தலையைக் கிரீடம் அணி செய்ய, மார்பில் முப்புரி நூல் உள்ளது. வலப்புறம் உள்ள வாயிற்காப்போரின் வலக்கையில் பாம்பு காணப்படுகிறது. இவர்கள் இருவரும் மாமல்லன் பாணியில் நேராகப் பார்த்தபடி உருவாக்கப் பட்டுள்ளனர்.

கருவறைக்கு எதிரில் அதனை ஒட்டி மேற்குத் திக்கில் மண்டபம் அமைந்துள்ளது. இங்குப் பாறையிலேயே நந்தி உருவாக்கப்பட்டுள்ளது. இதன் வடப்புறச் சுவரில் வலம்புரி விநாயகர், வீரபத்திரர், மற்றும் பிரம்மி, மகேசுவரி, கௌமாரி, வைணவி, வராகி, இந்திராணி, சாமுண்டி என்ற 7 கன்னியர்கள் புடைசிற்பமாகக் காணப்படுகின்றனர். ஏழு கன்னியர்களின் வடிவங்கள் அழகுடன் அமைக்கப்பட்டுள்ளது கண்டு இன்புறத் தக்கது.

கருவறைக்கு எதிரில் மண்டபத்தில் கீழ்புறச் சுவரில் நான்கு கைகளுடன் முருகன் சமபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் புடைசிற்பமாக உருவாக்கப் பட்டுள்ளான். இவனது பின்வலக்கையில் வச்சிரமும், பின்இடக்கையில் அக்கமாலையும், முன்வலக்கை அபய முத்திரையிலும், முன்இடக்கை கடிமுத்திரையிலும் உள்ளன. முருகனை அடுத்துச் சிவபெருமான் நான்கு கைகளில் சமபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் புடைசிற்பமாகக் காணப்படுகிறான். இவனது நான்கு கைகளில் பின்வலக்கையில் மானும், பின்இடக்கையில் மழுவும் இருக்க, முன்வலக்கை அபயமுத்திரையிலும், முன்இடக்கை கடிமுத்திரையிலும் அமைக்கப்

பட்டுள்ளன. இவளைச்சுற்றி இருபுறமும் மேலும் கீழுமாக நான்கு அமரர்கள் காணப்படுகின்றனர். இதனை அடுத்து எட்டுக் கைகள் கொண்ட துர்க்கை புடை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளாள். இவளது தலை சிதைந்துள்ளது. இவளுக்கு அருகில் இவளது ஊர்தியான சிங்கமும், இருபுறமும் கீழ்ப்பகுதியில் இருவரும் உருவாக்கப்பட்டுள்ளனர்.

சிவபெருமானது குடைவரைக் கோயிலை அடுத்து வடக்கு நோக்கி, திருமாலுக்குக் குடைவரைக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. இது கருவறை, மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. நீண்ட அமைப்பினைக் கொண்ட இதன் முகப்பில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத்தூண்களும் அணி செய்கின்றன. தூண்கள் மற்றும் அரைத்தூண்கள் ஆகியவற்றின் மேல் பகுதி கலசம், பலகை, ஆகிய வற்றையும், இடைப்பகுதி தாடி என்ற அமைப்பினையும், கீழே உட்கார்ந்த நிலையில் உள்ள சிங்கத்தையும் கொண்டனவாகும். இவை பல்லவப் பேரரசன் இராசசிம்மன் பாணியில் உருவாக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இத்தகு அமைப்பினை உடைய தூண்களும் அரைத் தூண்களும் மாமல்லபுரம் நீங்கலாக வேறு எந்தக் குடைவரையிலும் உருவாக்கப் படவில்லை என்பதால், இதை இந்தக் குடைவரைக் கோயிலின் தனிச்சிறப்பாகக் கொள்ளலாம். முகப்பு மூன்று வாயில்களைக் கொண்டது. அதன் இருபுறமும் இருவர் புடை சிற்பமாகக் காணப்படுகின்றனர். திரிபங்க நிலையில் நிற்கும் இருகைகளைக் கொண்ட இவர்களின் ஒரு கையில் மலர் அமைக்கப்பட்டுள்ளது. இவர்களது கையில் கதை இன்மையால், இவர்களை வாயிற்காப்போராகக் கருத இயலாது.

கருவறையை ஒட்டி அமைந்துள்ள மண்டபத்தில் கிழக்கு நோக்கி வைகுந்தநாதர் சிலை உள்ளது.

இவனது நான்கு கைகளில் பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் கத்திரிமுத்திரையில் இருக்க, முன்வலக்கை அபயமுத்திரையிலும், முன்இடக்கை ஊரு முத்திரையிலும் உள்ளன. சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள இவனுக்கு இருபுறமும் இரு துணைவியரும் இரு கைகளுடன் காணப்படுகின்றனர். இவர்களின் ஒரு கையில் மலர் உள்ளது. மண்டபத்தின் கீழ்ப்புறச் சுவரில் வைகுந்தநாதனுக்கு எதிரில் மேற்கு நோக்கி திருமால் தன் இரு துணைவியருடன் நின்ற திருக்கோலத்தில் புடை சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளான். இவன் சீனிவாசன் என்று அழைக்கப் பெறுகிறான். இவனது நான்கு கைகளில் பின்வலக் கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் கத்திரி முத்திரையில் காணப்பட, முன்வலக்கை அபய முத்திரை யிலும், முன் இடக்கை ஊரு முத்திரையிலும் உள்ளன. துணைவியரின் இரு கைகளில் ஒரு கையில் ஒரு மலரும், மற்றொரு கை கத்யவலம்பித முத்திரையிலும் அமைக்கப்பட்டுள்ளன.

கருவறைக்கு வலப்புறம் திருமாலின் வராக வடிவம் புடைசிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளது. சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள இவனது நான்கு கைகளில் பின்இரு கைகளில் சங்கும் சக்கரமும், முன்வலக்கை அபய முத்திரையிலும், முன்இடக்கை தொடைமீதும் உள்ளன. கருவறைக்கு இடப்புறம் திருமாலின் மற்றொரு தோற்றமான (அவதாரயான) நரசிம்மம் புடைசிற்பமாக அமைக்கப்பட்டுள்ளது. உத்குடி இருக்கையில் உட்கார்ந்துள்ள இவனது பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும், முன்வலக்கை முழங்கால் மீதும், முன்இடத் தொடை மீதும் உள்ளன.

கருவறையின் முகப்பில் இரண்டு தூண்களும் மற்றும் இரண்டு அரைத்தூண்களும் அமைக்கப்பட்டுள்ளன. தூண்களும் அரைத்தூண்களும் கலசம், தாடி என்ற உறுப்புகளையும், கோணவடிவான போதிகையை

யும் கொண்டன. கருவறையில் திருமால் பாம்பணைமீது பள்ளி கொண்டவனாக உருவாக்கப்பட்டுள்ளான்: இவன் கிழக்கில் தலை வைத்து, மேற்கில் காலை நீட்டிப் படுத்துள்ளான். இவனது இரு கைகளில் வலக்கை நீட்டியபடி இருக்க, இடக்கை மேலே உயர்த்திய நிலையில் உள்ளது. இவன் பள்ளி கொண்டுள்ள பாம்பினது ஐந்து தலைகளும் இவனது தலைக்கு மேல் காணப்பட, காலடியில் மதுகைடபரும், நாபியில் நான்முகனும் அமைக்கப்பட்டுள்ளனர். படைப்புக் கடவுளுடன் தும்புரு, நாரதர், அரம்பையர் ஆகியோரும் காணப்படுகின்றனர். இவனுக்குப் பின்னால் காணப்படும் அரக்கனை விபீடணனாகக் கொள்ளலாம். திருமாலுடன், திருமகள் மற்றும் மண்மகள் இங்கு அமைக்கப்படவில்லை.

அரவணை மேல் பள்ளி கொள்ளும் திருமாலின் சயனக்கோலம் அவனுக்கே உரிய ஒன்றாகும். இறைவனின் வேறு வடிவங்களைச் சயனக் கோலத்தில் காண்பது அரிது. இந்தத் திருக்கோலத்தை யோக சயன மூர்த்தி, போக சயன மூர்த்தி, வீரசயன மூர்த்தி, அபிசார சயனமூர்த்தி என ஆகமங்கள் நான்கு வகைப் படுத்திப் பேசுகின்றன. பூமடந்தையும் இன்றி இந்தத் திருவுரு இருப்பதால், இது யோகசயனமூர்த்தியாகும். இத்தகு திருவுருவங்களைச் சுற்றி இருக்கும் வடிவங்களின் எண்ணிக்கையைக் கணக்கில் கொண்டு, இதை உத்தமம், மத்திமம், அதமம் என மூன்று வகைகளாக ஆகமங்கள் மேலும் பகுத்துக் கூறுகின்றன. இங்குப் பாம்பணைப் பள்ளி கொள் பரமனைச் சுற்றிப் பெரும் அளவில் வடிவங்கள் இல்லாமையால், இதை மத்திமப் பிரிவைச் சார்ந்ததாகக் கொள்ளலாம்.

இங்குள்ள வைகுந்தநாதர், சீனிவாசன், வராகம், நரசிம்மம் மற்றும் அரவணைப் பள்ளியான் ஆகிய வடிவங்களுக்குச் சுதை பூசப்பட்டு, வர்ணப் பூச்சுகள்

அடிக்கப்பட்டுள்ளன. இங்குள்ள வர்ணப் பூச்சுகள் சித்தன்ன வாசல் குடைவரைக் கோயிலில் உள்ளது போன்று தமிழகத்தில் உள்ளவற்றில் மிகவும் தொன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

கி. பி. 775 முதல் 826 வரை பல்லவ அரசனாக விளங்கிய தண்டிவர்மனது 16ஆவது ஆட்சி ஆண்டில் விடேல் விடுகு முத்தரையன் என்ற குவான் சாத்தன் என்பவனால் இந்தக் குடைவரைக் கோயில்கள் உருவாக்கப்பட்டன எனத் தெரிய வருகிறது. எனவே இவை எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தனவாகும்.

# 19. தேவர்மலை குடைவரைக் கோயில்

புதுக்கோட்டையினின்றும் பொன்னமராவதி செல்லும் வழியில் பேரையூர் பிரிவினின்றும் சுமார் நான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மலைச் சாரலில் குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது.

கிழக்கு நோக்கி அமைந்துள்ள சிறிய அளவிலான குடைவரைக் கோயில் கருவறையை மட்டும் கொண்டது. இதற்கு முன்பு முற்கால சோழர் பணியில் உருவாக்கப் பெற்ற போதிகைகளைக் கொண்ட தூண்களை உடைய பிற்காலத்திய முகமண்டபம் காணப்படுகிறது.

கருவறையின் உள்ளே சதுரமான ஆவுடையாருடன் கூடிய இலிங்கத்திருவுரு பாறையிலேயே அமைக்கப்பட்டு உள்ளது. இறைவனின் திருப்பெயர் தேவநாதர் என்பதாம். தேவநாயகி என்ற திருப்பெயரைக் கொண்ட அன்னையின் சிலை தனியாக உள்ளது. இது பிற்காலத்தைச் சார்ந்ததாகும்.

கருவறையின் நுழைவாயிலை ஒட்டி இருபுறமும் இரு கைகள் கொண்ட இரண்டு வடிவங்கள் காணப்படு கின்றன. சமபங்க நிலையில் நின்ற நிலையில் உள்ள இந்த வடிவங்களின் தலைகளை சடா மகுடங்கள் அணி செய்கின்றன. இவர்களின் ஆடை அமைப்பு அழகாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. வலப்புறம் உள்ள வடிவம் புலத்தியர் என்றும் இடப்புறம் உள்ள உருவம் அகத்தியர் என்றும் கூறப்படுகிறது. அகத்தியரின் இடக்கை கடிமுத்திரையிலும், வலக்கை கருவறையில் உள்ள இலிங்கத் திருவுருவைச் சுட்டிக்காட்டி மேலே தூக்கிய நிலையிலும் உருவாக்கப்பட்டுள்ளன. புலத்தியரின் வலக்கை கடி முத்திரையிலும், இடக்கை

மேலே தூக்கிய நிலையிலும் உள்ளன. இந்த இரு வடிவங்களில் புலத்தியர் வடிவம் அழகு மிக்கதாக உருவாக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாம். புலத்தியர் என்று அழைக்கப்பெறும் தாடியின்றி உள்ள வடிவம் குறுநில மன்னனாக இருக்கலாம் என்ற கருத்தும் நிலவுகிறது. இந்த வடிவங்களில் ஒன்று 63 சிவனடியார்களில் ஒருவரான பெருமிழலைக் குறும்ப நாயனார் என்றும் கருதப்படுகிறது. இவரை நம்பியாண்டார் நம்பி தம் திருத்தொண்டர் திருவந்தாதியில் ''நறை நன் மலர்த்தும் மிழலைக்குறும்பன் எனும் நம்பியே'' என்றும், சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில் ''வேத நீதி மிழலைக்குறும்பர்'' என்றும் போற்றியுள்ளனர். இந்த வடிவங்கள் யாரைக் குறிக்கின்றன என்பதைத் திட்டமாக அறிய இயலவில்லை.

புலத்தியர் என்று கூறப்படும் வடிவை ஒட்டி நான்கு கைகளுடன் யோக இருக்கையில் வலம்புரி விநாயகர் புடைசிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளார்; அகத்தியர் என்று அழைக்கப்பெறும் வடிவினை ஒட்டி உத்குடி இருக்கையில் சண்டிகேசுவரர் அமைக்கப்பட்டுள்ளார். இவரது இரு கைகளில் வலக்கையில் மழுவும், இடக்கை தொடை மீதும் காணப்படுகின்றன. இந்தவ்டிவை ''பெருமிழலைக் குறும்ப நாயனார்'' என சிவக்கவி மணி திரு. C. K. சுப்ரமணிய முதலியார் தமது திருத்தொண்டர் புராண உரையில் [மூன்றாம் பகுதி-இரண்டாம் பாகம்] குறிப்பிட்டுள்ளார். மலையடிபட்டியில் உள்ள சிவனுக்குரிய குடைவரைக் கோயில், மற்றும் குன்னாண்டார் கோயிலில் உள்ள இரண்டாவது குடைவரைக் கோயில் ஆகிய கோயில்களில் உள்ள வடிவங்களுடன் ஒப்பிட்டுப்பார்த்தால், இதை சண்டிகேசுவரர் எனக்கொள்வதே பொருத்தமாகத்தோன்றுகிறது.

குடைவரைக் கோயிலை ஒட்டி, மேற்கு நோக்கித் தனியாக ஒரு திருமுன் உள்ளது. அங்குள்ள சமாதி

மேலே குறிப்பிட்ட பெருமிழலைக் குறும்ப நாயனாரது என்று வணங்கப்படுகிறது. அதன் மேல் இலிங்கத்திருவுரு அமைக்கப்பட்டுள்ளது.

இங்குள்ள பாறையில் உள்ள கல்வெட்டு எந்தக் குறிப்பிட்ட மன்னது என்பது தெரியவில்லை. அதில் இந்தக் கோயில் விருதராஜபயங்கர வள நாட்டில் உள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்தக் குடைவரைக் கோயில் முத்தரையர் காலத்தில் உருவாக்கப்பட்டதாகத் தெரியவருகிறது.

# 20. பூவாலக்குடி குடைவரைக் கோயில்

புதுக்கோட்டையினின்றும் காரையூர் வழியாகப் பொன்மைரர்வதி செல்லும் வழியில் வையாபுரிப் பிரிவினின்றும் சுமார் 2 கிலோ மீட்டர் தொலைவில் பூவாலக்குடி என்ற சிற்றூர் உள்ளது. ஊருக்குச் சற்று தள்ளியுள்ள ஒரு சிறிய குன்றில் குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது.

கிழக்கு நோக்கி அமைக்கப் பெற்ற குடைவரைக் கோயில் சிறிய அளவிலானது. கருவறைமட்டும் கொண்டது. கருவறையின் உள்ளே சதுரமான ஆவுடையாருடன் கூடிய இலிங்கத்திருவுரு பாறை யிலேயே உருவாக்கப்பட்டுள்ளது. இறைவனது திருப் பெயர் புஷ்பவனேசுவரர் என்பதாம். இதன் நுழை வாயிலுக்கு இருபுறமும் அரைத்தூண்களுடன் கூடிய சிறிய அளவிலான புரைகள் காணப்படுகின்றன. கருவறைக்கு மேல் செங்கல்லால் விமானம் கட்டப்பட்டு உள்ளது. இதற்கு முன்பு முற்காலத்திய சோழர் பாணியில் அமைந்த போதிகைகளைக் கொண்ட தூண்களை உடைய பிற்காலத்தைச் சார்ந்த பெரிய மண்டபம் உள்ளது.

குடைவரை கோயிலுக்கு வெளியில் தெற்கு நோக்கிய பாறையில் நான்கு கைகளைக் கொண்ட வலம் புரி விநாயகர் இடுப்பு அளவில் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளான். முன்வலக்கையில் மோதகமும், பின்இடக்கையில் முறிந்த கொம்பும் காணப்படுகின்றன.

இந்த ஊரின் பழமையான பெயர் புவனகிரி பட்டினம் என்று சொல்லப்படுகிறது. கோயிலுக்கு வெளியில் தனியாக நந்தி உள்ளது. அதன் கழுத்தில்

அறுபட்ட குறிகாணப்படுகிறது. பக்கத்து ஊரான கோவனூரைச் சார்ந்த தீய மாடு இது என்றும், இங்கு வந்ததும் கல்லாகி விட்டது என்றும், அந்த நிலையிலும் இதன் கழுத்தை அறுக்க இரத்தம் வந்ததாகவும் செவி வழிச் செய்தி இங்கு நிலவுகிறது.

இந்தக் குடைவரைக் கோயில் பல கல்வெட்டுகளைத் தன்னகத்தே கொண்டது. இதன் வாயிலில் உள்ள கல்வெட்டில் புதிக்காளரி என்ற அமருண்ணி முத்தரையன் என்ற பெயர் காணப்படுகிறது. எனவே இந்தக் குடைவரைக் கோயில் அவனால் உருவாக்கப் பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

சோழப்பேரரசர்களான இராசேந்திர சோழன் [கி. பி. 1050-1063], குலோத்துங்கன், இரண்டாம் இராசாதி இராசன், பாண்டிய மன்னனான முதலாம் குலசேகரத் தேவன், விசய நகர மன்னனான வீரப் பிரதாப சதாசிவ தேவ மகாராயன் ஆகியோரின் கல்வெட்டுகள் இங்கு உள்ளன. இரண்டாம் இராசாதி இராசன் கல்வெட்டில் இந்தக் கோயில் உள்ள நாடு கேரளாந்தக வளநாடு என்று கூறப்பட்டுள்ளது. இங்குள்ள மண்டபம் கட்டப்பட்டதை சோழ மன்னன் பரகேசரிவர்மனது ஐந்தாவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு தெரிவிக்கிறது சோழ மன்னர்கள் பரகேசரிவர்மன், இராசகேசரிவர்மன் என்று மாறி மாறி தங்களை அழைத்துக் கொண்டனர். எடுத்துக்காட்டாக முதலாம் ஆதித்த சோழன் தன்னை இராசகேசரிவர்மன் என்று அழைத்துக் கொண்டான். அவனது மகனான முதற் பராந்தக சோழன் பரகேசரிவர்மன் என்ற பட்டப் பெயரைப் பூண்டான். இந்தக் கல்வெட்டில் காணப் பெறும் பரகேசரிவர்மன் என்ற பட்டம் கொண்ட சோழ மன்னன் யார் என்பது தெரியவில்லை. இருப்பினும் சோழப் பேரரசர்கள் காலத்தில் இந்தக் கோயிலுக்குத் திருப்பணி நடைபெற்றுள்ளது என்பது தெளிவாகிறது.

## 21. மலையக் கோயில் குடைவரைக் கோயில்கள்

புதுக்கோட்டையினின்றும் பொன்னமராவதி செல்லும் வழியில் உள்ள நச்சாந்து பட்டியை அடுத்துள்ள மலையக் கோயில் பிரிவினின்றும் சுமார் 1 கி. மீட்டர் தொலைவில் மலையக் கோயில் என்ற சிற்றூர் உள்ளது. இங்குள்ள மலையின் இருபுறமும் இரு குடைவரைக் கோயில்களும், மலையின் மேல் பிற்காலத்திய முருகனது கோயிலும் உள்ளன. முருகனது கோயிலுடன் கூடிய மலையின் தோற்றம் தொலைவினின்றும் வரும்போதே கண்களுக்குப் பெரும் விருந்தாகக் காட்சி அளிக்கிறது. இதன் பழமையான பெயர் திருவோதிக் கால்வாய் எனப்படுகிறது. இங்கு நாவல் மரங்கள் பெரும் அளவில் இருந்தமையால், இது திருநாவலங்கிரி என்றும் அழைக்கப்பெற்றது. நாவல் மரம் தான் இந்தக் கோயிலின் தலமரம் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த ஊரில் நிலவும் அமைதியைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. இங்கு முனிபுங்கவர்கள் தவம் புரிந்து கொண்டிருந்தமையால், இப்பதி பேரமைதி உடையதாகச் சொல்லப்படுகிறது. காரணம் எதுவாயினும், இங்கு நிலவும் அமைதி மனதை ஒருமுகப் படுத்தும் முயற்சிக்கு பெருந்துணையாக உள்ளது என்றால், அது சற்றும் மிகையாகாது.

இங்குள்ள மலையில் தெற்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப்பெற்றுள்ளது. இது கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. இதன் முகப்பில் இருதூண்களும், இரு அரைத் தூண்களும் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டை

யுடன் கூடிய அமைப்புடன் காணப்படுகின்றன. இவற்றின் இடையில் நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகைகள் உருவாக்கப்பட்டுள்ளன. தூண் களும் அரைத்தூண்களும் மகேந்திரவர்மன் பாணியில் பருமனான அமைப்பைக் கொண்டுள்ளன.

மேற்கு நோக்கி அமைந்துள்ள கருவறையின் நுழை வாயிலுக்கு இருபுறமும் இரு அரைத்தூண்களும் அவற்றை ஒட்டி சிறிய அளவிலான புரைகளும் உள்ளன. கருவறையின் உள்ளே வட்டமான ஆவுடையாருடன் கூடிய இலிங்கத்திருவுரு பாறையிலேயே உருவாக்கப் பட்டுள்ளது. இவரது திருப்பெயர் திருவருள் காளீசுவரர் என்பதாம் முனிவர்களது வேண்டுகோளுக்கு இணங்கி இறைவன் துர்க்கையின் சினத்தைத் தணித்து அமைதி கொள்ள அருள் புரிந்தமையால், இவன் திருவருள் காளீசுவரர் எனப்பட்டதாகக் கூறப்படுகிறது. இவன் பாறையிலேயே அமைக்கப்பட்டிருப்பதால், மலையிலிங்கம் என்றும் அழைக்கப்படுகிறான்.

கருவறையை ஒட்டி உருவாக்கப் பெற்றுள்ள மண்டபத்தின் பின் சுவரில் மகேந்திரவர்மன் பாணியில் நான்கு அரைத் தூண்களும் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப்பட்டையுடனும், தரங்கப் போதிகை களுடனும் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றிற்கு இடையில் பெரிய புரைகள் மூன்று காணப்படுகின்றன. இங்குத் தனியாக நந்தியும், தவயோகி ஒருவரின் சிலை யும் உள்ளன.

கருவறைக்கு எதிரில் மண்டபத்தின் சுவரில் கிழக்கு நோக்கியபடி பெரிய அளவிலான வலம்புரி பிள்ளையார் புடைசிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளான். பிள்ளையார் பட்டி குடைவரைக் கோயிலில் உள்ள பிள்ளையார் வடிவிற்கு அடுத்த பெரிய அளவிலான திருவுரு இது. நான்கு கைகள் கொண்ட இவன் யோக இருக்கையில் உட்கார்ந்து உள்ளான். இவனது நான்கு கைகளில்

முன்வலக்கையில் மோதகமும், பின்வலக்கையில் மாம்பழமும், முன்இடக்கையில் பாசமும், பின்இடக் கையில் முறிந்த கொம்பும் காணப்படுகின்றன.

குடைவரைக் கோயிலின் முகப்பை ஒட்டி, மேற்கு நோக்கிய சுவரில் கல்வெட்டு ஒன்று பொறிக்கப் பட்டுள்ளது. கருவறைக்குத் தென்புறம் பாறை யிலேயே உருவாக்கப்பட்டுள்ள இலிங்கத் திருவுரு வின் திருப்பெயர் மலைக் கொழுந்தீசுவரர் என்பதாம். குடைவரைக் கோயிலை ஒட்டி பிற்காலத்தில் முகமண் டபம் ஒன்று கட்டப்பட்டுள்ளது. சோழமன்னன் குலோத்துங்கன் மற்றும் விக்ரம பாண்டியன் மற்றும் கி. பி. 1190 முதல் 1217வரை ஆட்சி புரிந்த குலசேகரத் தேவர் ஆகியோரின் கல்வெட்டுகள் உள்ளன. பாண்டிய மன்னன் கல்வெட்டு இந்தக் குடைவரைக் கோயில் விருதராஜ பயங்கரவள நாட்டில் இருப்பதாகக் கூறுகிறது.

இரண்டாவது குடைவரைக் கோயில் மலையின் மற்றொரு பகுதியில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இது கருவறை மட்டும் கொண்டது. எட்டுப்பட்டைக் கொண்ட அமைப்பினை உடைய ஆவுடையாரின் பேரில் இலிங்கத்திருவுரு காணப்படுகிறது. இதன் கோமுகத் திற்குக் கீழ் யாளியின் அமைப்பு அழகுற உருவாக்கப் பட்டுள்ளது. இதன் நுழைவாயிலின் இரு புறமும் நான்கு அரைத் தூண்களும் அவற்றிற்கு இடையில் பெரிய அளவிலான இரண்டு புரைகளும் உள்ளன. வடப்புறமுள்ள புரையில் பல்லவர் கிரந்தத்தில் அழகான கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. அதனை அடுத்து பெண்ணின் புடை சிற்பம் முற்றுப் பெறாத நிலையில் காணப்படுகிறது.

இங்குள்ள பல்லவக் கிரந்த கல்வெட்டில் "பரிவாதினி" என்று பொறிக்கப்பட்டுள்ளது.

பரிவாதினி என்பது ஏழு நரம்புகளைக் கொண்ட ஒரு வகை யாழாகும். தமிழ் எழுத்தில் உள்ள கல்வெட்டில் குணசேனன் என்பான் கண்டு பிடித்த பரிவாதினி யாழின் தன்மைகள், அவை இசைக்கும் முறைகள் ஆகியவை கூறப்பட்டுள்ளன. தமிழ் இலக்கியங்கள் மகரயாழ், பேரியாழ், செங்கோட்டு யாழ், சகோத்தி யாழ் என நான்கு வகை யாழ்களைப் பற்றி பேசுகின்றன. இங்கு குறிப்பிடப்பட்டுள்ள பரிவாதினி யாழ் குணசேனனின் கண்டு பிடிப்பாகும். இவன் தமிழகத்தில் காஞ்சிபுரத்தினின்றும் கி. பி. 600 முதல் 630 வரை செங்கோலோச்சிய பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மப் பல்லவனாகும். இவனது கல்வெட்டு இங்கு காணப்படுவதால், இதன் காலத்தை ஏழாம் நூற்றாண்டாகக் கருதலாம்.

---

## 22. சித்தன்னவாசல் குடைவரைக் கோயில்

புதுக்கோட்டையினின்றும் அன்னவாசல் செல்லும் வழியில் சித்தன்ன வாசல் பிரிவினின்றும் குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்ட மலை சுமார் ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. அறிவர் கோயில் என்று அழைக்கப்பெறும் இது தமிழகத்தில் சமண முனிவர்களின் புடை சிற்பங்கள் உருவாக்கப்பெற்ற ஒரே ஒரு குடைவரைக் கோயில், சமண முனிவர்களின் புடை சிற்பங்களைக் கொண்ட இயற்கையாக அமையப்பெற்ற குகைகள் உள்ளன. பாறையில் உள்ளடங்க சிறிது வெட்டப்பெற்று, அதில் சமண முனிவர்களின் புடை சிற்பங்கள் உருவாக்கப் பட்டிருக்கலாம். திருநெல்வேலி மாவட்டத்தில் கழுகு மலையில் உள்ள சமண சிற்பங்கள் உள்ள மலையின் உச்சியில் பாறையில் சற்று உள்ளடங்க வெட்டப்பெற்று, அங்கு ஒரு சமண முனிவரின் புடை சிற்பம் அமைக்கப் பட்டுள்ளதைச் சான்றாகக் கூறலாம். தூண்கள் மற்றும் அரைத்தூண்களைக் கொண்ட முகப்பினை உடைய சமணர்களுக்கு உரிய குடைவரைக் கோயில் தமிழகத்தில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. சித்தன்னவாசல் என்பது சித்தானம்+வாசல் எனப் பிரிக்கப்பட்டு, துறவிகளின் இருப்பிடம் எனப்பொருள் கொள்ளப்படுகிறது.

மலையின் சரிவில் மேற்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது. இது கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. இதன் முகப்பில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத் தூண்களும் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டையுடனும் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு இடையில் நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகை காணப்படுகிறது. இவை மகேந்திரவர்மன்

பாணியில் பருமனான தோற்றம் உடையனவாக உருவாக்கப்பட்டுள்ளன. கருவறை முன் காணப்படும் அரைத்தூண்களும் முகப்பில் உள்ளனவற்றைப் போன்ற அமைப்பினைக் கொண்டனவாம். நடுவில் உள்ள எட்டுப் பட்டைகளில் தாமரை இதழ்கள் செதுக்கப் பட்டுள்ளன.

மண்டபத்தின் வடபுறச்சுவரில் ஒரு சமண முனிவரின் வடிவம் புடைச் சிற்பமாக உருவாக்கப் பட்டுள்ளது. இவர் தலைக்கு மேல் ஒரு குடை அமைக்கப்பட்டுள்ளது. இவருக்கு எதிரில் உள்ள தென் புறச் சுவரில் தலைக்கு மேல் ஐந்து தலைகள் கொண்ட பாம்பினை உடைய ஒரு சமண முனிவரின் வடிவம் புடைச் சிற்பமாகக் காணப்படுகிறது. தலைக்கு மேல் ஒரு குடையுடன் கூடிய வடிவம் சமண சமயத்தலைவர் என்றும், ஐந்து தலைப் பாம்பு தலைக்கு மேலே உள்ள வடிவம் ஏழாவது தீர்த்தங்காரரான சுபார்சுவநாதர் என்றும் கருதப்படுகின்றன. தீர்த்தங்காரர் என்றால் மீளவும் பிறவாப் பேற்றினை அடைந்தவர் என்று பொருளாம். கருவறையின் பின்புறச் சுவரில் மூன்று தீர்த்தங்காரர்களின் வடிவங்கள் புடைச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவர்களது தலைக்கு மேல் மூன்று குடைகள் அமைக்கப்பட்டுள்ளன. மேலே குறிப்பிட்ட ஐந்து சமண முனிவர்களின் வடிவங்களும் உட்கார்ந்த நிலையில் எழில் மிக்கனவாக உருவாக்கப் பட்டுள்ளன.

கருவறையின் விதானத்தில் நடுவில் தாமரை மலர் உருவாக்கப்பட்டு, வண்ணப் பூச்சு செய்யப்பட்டுள்ளது. இதைச் சுற்றிலும் பல சதுர அமைப்புகள் உள்ளன. ஒவ்வொரு சதுர அமைப்பின் நான்கு மூலைகளிலும் நான்கு சிறிய சதுர அமைப்புகள் தீட்டப்பெற்றுள்ளன. இடையில் சுவஸ்திக் குறி காணப்படுகிறது. இந்தக் குறியின் நான்கு மூலைகளும் துறக்கம் (சுவர்க்கம்),

நரகம், மனிதன், விலங்கு ஆகியவற்றைக் குறிப்பனவாகக் கொள்ளப்படுகிறது. இந்தக் குறியின் நாற்புறங்களில் உட்கார்ந்த நிலையில் இரு முனிவர்களும், ஆடும், சிங்கமும் உள்ளன. ஆட்டினை ஒட்டிய வடிவம் ஆட்டைச் சின்னமாகக் கொண்ட பதினேழாவது தீர்த்தங்காரரான குந்தநாதர் என்றும, சிங்கத்தை ஒட்டிய வடிவம் சிங்கத்தைச் சின்னமாக உடைய இருபத்தி நான்காவது தீர்த்தங்காரரான மகாவீரவர்த்த மானர் என்றும் கருதப்படுகின்றன.

மண்டபத்தின் விதானத்தில் தாமரை மலர்கள் நிறைந்த குளம் தீட்டப்பெற்றுள்ளது. அதில் மீன், அன்னம், எருமை போன்றவை காணப்படுகின்றன. மேலும் மூன்று சமணர்கள் தீட்டப்பெற்றுள்ளனர். அவர்களில் இருவர் தாமரை மலர்களைப் பிடித்த நிலையிலும், மூன்றாமவர் இடக்கையில் பூக்கூடையைப் பிடித்துக்கொண்டும் வலக்கையால் பூப்பறிக்கும் நிலையிலும் காணப்படுகின்றனர். தற்காலத்தில் தெரியும் தாமரைக்குளம் கடுகை பூமி என்றும், இது சமணர்களின் சமவ சரணத்தின் ஒரு பகுதி என்றும் தெரியவருகிறது. மீதிப்பகுதிகள் கால வெள்ளத்தாலோ அல்லது வண்டுகள் போன்றவற்றாலோ அழிந்து போய்விட்டன.

சமவ சரணம் என்பது சமம் மற்றும் அவசரணம் என்ற இரு சொற்களைக் கொண்டது. அதாவது ஆச்சாரியாரின் திருவாக்குகளைக் கேட்டு இறை ஞானம் பெற யாவருக்கும் சமமான வாய்ப்பு உண்டு என்பதாம். ஆச்சாரியார் பரிபக்குவ நிலை அடைந்தபின், அமரர்கள் உட்பட எல்லாப் பிறவிகளுக்கும் ஞானோபதேசம் அளிக்க இந்திரனால் கட்டப்பெற்றதுதான் சமவ சரணம் என்பது. இது ஒரு வட்டமான அமைப்பைக் கொண்டது என்றும், இதை "விசய சக்கரம்" என்று அழைக்கப் பெறும் என்றும் சொல்லப்படுகிறது.

முகப்பில் உள்ள இருதூண்களின் முன்புறம் இரண்டு நடனப்பெண்களின் வடிவங்கள் இடுப்பு அளவு மட்டும் ஓவியமாகத் தீட்டப் பெற்றுள்ளன. இடப்புறம் உள்ள பெண்ணின் இடக்கை நீட்டப்பட்டுள்ளது யானை தன் துதிக்கையினை நீட்டியுள்ளது போன்று உள்ளது. இதை கஜமுத்திரை என்பர். வலது உள்ளங்கை சதுர அமைப்பினைக் கொண்டதாகத் தீட்டப்பெற்றுள்ளது. இந்த நிலை மிகவும் உயர்ந்தது எனப்படுகிறது. வலது தூணில் உள்ள நடனப்பெண்ணின் வலக்கையின் விரல்களும் உள்ளங்கையும் மேலே நோக்கிய நிலையில் உள்ளன. அவளது இடக்கை கொடிபோன்று நீட்டிய நிலையில் தீட்டப்பட்டுள்ளது. இந்தப் பெண்கள் மூக்கணி அணிந்து காணப்படவில்லை. இவர்களது வடிவங்களினின்றும் அக்காலப் பெண்கள் குறிப்பாக நடனப்பெண்கள் அணியும் அணிகலன்கள், கூந்தலை அணி செய்யும் முறைகள், மேலாடை அணிந்துள்ள தன்மை, மற்றும் நடனக்கலையின் நுட்டச் சிறப்புகள் ஆகியவற்றை தெரியலாம்.

இடப்புறத்தூணில் எட்டுப்பட்டை கொண்ட இடைப்பகுதியில் உட்புறத்தில் அரசன் ஒருவன் மற்றும் அவனது மனைவி ஆகியோரின் வடிவங்கள் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளன. அரசன் ஐந்து அடுக்குகள் கொண்ட அழகு மிக்க கிரீடத்தைத் தலையில் அணிந்துள்ளான். மேலும் அவன் அரசனுக்குரிய மிடுக்கான தோற்றத்தை உடையவனாகத் தீட்டப்பட்டுள்ளது ஓவியக் கலைஞனின் கைவண்மைக்கு ஒரு எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

இங்கேயுள்ள குடைவரைக் கோயில் பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மனால் உருவாக்கப்பட்டதாக ஒரு கருத்து நிலவிவந்தது. குடைவரைக் கோயில்களை முதலில் பல்லவர்கள் உருவாக்கிய காரணத்தால், குடைவரைகள் என்றால் அவை பல்லவர்களால் தான்

தோற்றுவிக்கப்பட்டன என்ற தவறான அடிப்படையில் எழுந்த கருத்தாகும் இது. மேலும் பல்லவர்களது ஆட்சி திருச்சிக்குத் தெற்கே பரவியிருந்தமைக்கு வரலாற்றுச் சான்றுகள் இல்லை. இதுவுமன்றி, பாண்டியப் பேரரசன் வரகுண மகாராசனின் மகனும் கி. பி 835 முதல் 862 வரை பாண்டிய அரியணையை அலங்கரித்த சீமாறன் பரசக்கர கோலாகன் என்ற சீவல்லபனின் கல்வெட்டு குடைவரைக் கோயிலை அடுத்து தென்புறத்தில் உள்ள பாறையில் பொறிக்கப் பட்டுள்ளது. அதில் அவன் ''பார் முழுதாண்ட பஞ்சவக் குலமுதல்— ஆர் கெழுவைவேல் அவனிவ சேகரன்—சீர் கெழு செங்கோல் சீவல்லபன்'' என்று புகழப்படுகிறான். எனவே இது பாண்டியர்களால் உருவாக்கப்பட்டது என்றும், இங்குள்ள அரசன், அரசியர் வடிவங்கள் பாண்டிய மன்னன் ஸ்ரீ மாறன் மற்றும் அவனது மனைவி என ஆராய்சியாளர்கள் தற்போது கருதுகின்றனர் பாண்டிய மன்னன் கல்வெட்டினின்றும் மதுரை ஆசிரியனான இளங்கௌதமன் என்பான் இங்கே உள்ள மண்டபத்தைத் திருப்பணி செய்ததும், கோயிலுக்கு முன்னால் மற்றொரு மண்டபம் கட்டியதும் தெரியவருகிறது.

இங்ஙனம் இந்தக் குடைவரைக் கோயில் சிற்பம், ஓவியம், நடனம் ஆகிய சிறந்த கலைகளை உணர்த்தும் கலைக் கூடமாகத் திகழ்கிறது.

இந்தக் குடைவரைக்கோயில் உருவாக்கப்பட்டுள்ள நீண்டு அமைந்துள்ள மலையின் இடைப்பகுதியில் கீழ் புறமாக இயற்கையாக நீண்ட பெரிய இடைவெளி காணப்படுகிறது. இதை அடைய மலையின் உச்சிக்கு ஏறிச்செல்வது மிகவும் சிரமம் அளிப்பதாக இருந்து வந்தது. ஏறக்குறைய மூன்று ஆண்டுகளுக்கு முன் இந்த இடைவெளியை அடைய மலையின் கீழ் இருந்து உச்சி வரை பாறையில் படிகள் வெட்டப்பட்டு, படிகளிச்

ஏறிச்செல்வதற்கு எளிதாக படிகளை ஒட்டி இரும்பாலான கைப்பிடி அமைக்கப்பட்டுள்ளது. எனவே சிறியோர் முதல் முதியோர் வரை மலைமேல் எளிதாக ஏறிச்செல்ல இயலும். உச்சியினின்றும் இடைவெளியை அடையும் வழியில் உள்ள குறுகிய வழி ஏழு அடி உள்ளதாக பாறையில் வெட்டப்பட்டு இருப்பதால், இது ஏழடிப்பட்டம் என்று அழைக்கப் பெறலாயிற்று.

இந்தப் பெரிய இடை வெளியில் சமண முனிவர்கள் தங்குவதற்கு ஏற்றவகையில் படுக்கைகள் போன்ற 17 அமைப்புகள் பாறையில் ஆங்காங்கே செதுக்கப்பட்டு உள்ளன. இவற்றில் தலையை வைத்துப் படுப்பதற்குத் தக்கபடி, ஒரு கோடியின் சற்று உயரமாக அமைக்கப்பட்டுள்ளது; மீதியுள்ள பகுதி சற்று பள்ளமாகக் காணப்படுகிறது. குன்றக்குடி குடைவரைக் கோயில்களை அடுத்து உள்ள பாறையில் சமண முனிவர்களது படுக்கைகள் உருவாக்கப்பட்டுள்ளன. ஆனால் அவை கரடு முரடாகக் காணப்படுகின்றன. அதற்குமாறாக இங்கு பாறையில் அமைக்கப்பட்டுள்ள படுக்கைகள் வழுவழுப்பாக நல்ல முறையில் உள்ளன.

இங்குள்ள படுக்கைகளில் மிகவும் பெரியதும் பழமையானதுமான படுக்கையில் தமிழ் பிரம்மி கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இது இருந்து பிறப்பதற்கு முற்பட்டது எனத் தெரியவருகிறது. அதில் "எருமிநாட்டு குமுழூர் பிறந்த கவுடி இதற்கு சிறுபாவில் இளையர் செய்த அதிட்டானம்" என்று வெட்டப்பட்டு உள்ளது. இங்கு மேலும் 8 மற்றும் 9 ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. அதில் அஞ்ஞு நந்தி போன்ற சமணத்துறவிகளைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

இந்தக் குடைவரைக் கோயிலில் தீட்டப்பெற்ற ஓவியங்களின் சிறப்பால், இது "தமிழக அஜந்தா" என்ற புகழினைப் பெற்றுள்ளது. 1000 ஆண்டுகளுக்கு

முற்பட்ட இந்த ஓவியங்கள் மிகவும் மங்கலாகத் தெரி கின்றன. இங்குள்ள ஓவியங்களைத் தீட்ட உபயோகித்த பச்சிலை சாறு காரணமாக ஒரு வகை வண்டு இந்த ஓவியங்களை அழித்துவிடுவதாகக் கூறப்படுகிறது. இந்த நிலையை நீடிக்கவிடுவது சரியன்று. தமிழகத்தின் தொன்மை மிக்கதும், புகழ் படைத்ததுமான இந்த ஓவியங்களை மேலும் அழியாது காக்க வேண்டியது மிகவும் இன்றியமைததாகும்.



# 23. அரளிப்பட்டி குடைவரைக் கோயில்

பசும் பொன் முத்து ராமலிங்கம் மாவட்டத்தில் திருப்புத்தூரினின்றும் சிங்கம் புணரி செல்லும் வழியில் மருதுப்பட்டிப் பிரிவினின்றும் ஏறத்தாழ இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் அரளிப்பட்டி என்ற சிற்றூர் உள்ளது. ஊரைச் சென்று அடைவதற்கு முன் நீண்ட அமைப்பிலான குன்று காணப்படுகிறது. அங்குக் கட்டப் பட்டுள்ள முருகனது கோயிலை அடுத்துள்ள ஒரு சரிவில் குடைவரைக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது.

கிழக்கு நோக்கி உருவாக்கப்பட்டுள்ள சிறிய அளவிலான குடைவரைக் கோயில் கருவறையை மட்டும் கொண்டது. அதில் வட்டமான ஆவுடையாருடன் கூடிய இலிங்கத்திருவுரு பாறையிலேயே அமைக்கப்பட்டுள்ளது.

கருவறையின் நுழை வாயிலை ஒட்டிவடக்கு நோக்கி உள்ள புரையில் முகலிங்கம் புடை சிற்பமாக உருவாக்கப் பட்டுள்ளது. இலிங்கம் பலவகைகளாகப் பிரிக்கப்பட்டு உள்ளது. அவற்றில் ஒன்று மனிதனால் செய்யப்பெற்ற இலிங்கம். அது 108 சிறிய இலிங்கங்களைக் கொண்ட 'அட்டோத்திர இலிங்கம்', 1008 சிறிய இலிங்கங்களை உடைய 'சகஸ்ரலிங்கம்', 16, 24 பட்டைகளாகத் திட்டப்பெற்ற தாரைலிங்கம், முகங்களை உடைய முகலிங்கம் எனப்பல வகைப்படும். முகலிங்கத்தில் ஒன்று முதல் ஐந்து முகங்கள் உருவாக்கப்பெறும். இத்தகு இலிங்கங்கள் அரிதாகத் தான் காணப்படுகின்றன தென் ஆற்காடு மாவட்டத்தில் அட்டவீரட்டதலங்களில் ஒன்றான திருவதிகையில் 4 முகங்களைக் கொண்ட முகலிங்கத்தையும், திருவக்கரையில் 3 முகங்களை உடைய மூலவராக உள்ள முகலிங்கத்தினையும் எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம். இங்குள்ள முகலிங்கம் முற்றுப்

பெறாத நிலையில் உள்ளது. அதில் ஒரு முகம் மட்டும் உருவாக்கப்பட்டுள்ளது. குடைவரைக் கோயிலில் வேறு எங்கும் முகலிங்கம் இருப்பதாகத் தெரியவில்லை.

கருவறையின் நுழைவாயிலை ஒட்டி, தெற்கு நோக்கி உள்ள புரையில் முற்றுப்பெறாத வடிவம் ஒன்று காணப்படுகிறது. இருகால்களும் குத்திட்டநிலையில் உட்கார்ந்துள்ள இந்த வடிவத்தின் வலக்கை தொடை மீது இருக்க, இடக்கை முழங்கால் மேல் அமைக்கப்பட்டு உள்ளது. கையில் உள்ள பொருள் சரியாகத் தெரிய வில்லை. முகத்தில் தாடி போன்ற அமைப்பு காணப்படு கிறது. கருவறைக்கு முன் உள்ள வாயிற்காப்போர் நின்ற நிலையில் கையில் கதையுடன் உருவாக்கப்பட்டிருப்பர். இங்கு இந்த வடிவம் உட்கார்ந்த நிலையில் கையில் கதையின்றி இருப்பதால், வாயிற்காப்போராகக் கருத இயலாது.

# 24. அரிட்டாபட்டி குடைவரைக் கோயில்

மதுரையினின்றும் மேலூர் செல்லும் வழியில் உள்ள நரசிங்கபட்டி என்ற சிற்றூரினின்றும் ஏறத்தாழ நான்கு கிலோ மீட்டர் தொலைவில் அரிட்டாபட்டி உள்ளது. ஊரிலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மலையில் மேற்கு நோக்கி குடைவரை அமைக்கப்பட்டு உள்ளது. இயற்கையாக உள்ள மலைச் சரிவில் இது உருவாக்கப்பட்டுள்ளது. இது அமைந்துள்ள மலையைச் சுற்றி மூன்று பக்கங்களிலும் மலைகள் காணப்படு கின்றன. இயற்கை எழில் மிக்கதாய் மனதிற்கு இன்பம் அளிப்பதாக உள்ளது.

குடைவரை கருவறை மற்றும் மண்டபம் ஆகிய வற்றைக் கொண்டது. கருவறையின் உள்ளே வட்டமான ஆவுடையாருடன் இலிங்கத்திருவுரு உருவாக்கப்பட்டு உள்ளது. அபிடேக நீர் செல்ல இதில் வழி அமைக்கப் பட்டுள்ளது. அதன் கீழ்பகுதியில் தாமரை மலரைக் கொண்ட அமைப்பு காணப்படுகிறது.

கருவறையின் வாயிலுக்கு இருபுறமும் வாயிற் காப்போரை புடைச் சிற்பமாகக் கொண்ட புரைகள் உருவாக்கப்பட்டுள்ளன. இருகைகளை உடைய இவர்கள் திரிபங்க நிலையில் மாமல்லன் பாணியில் நேரான பார்வையை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். வாயிலுக்கு இடப்புறம் உள்ளவரின் இடக்கைப் பதாகை முத்திரையிலும், வலக்கை கதை மீதும் அமைக்கப்பட்டு உள்ளன. வாயிலுக்கு வலப்புறம் உள்ளவரின் வலக்கை கதை மீதும். இடக்கை சூசி முத்திரையிலும் உள்ளன. தலையில் கிரீடம் விளங்க, அதற்குப்பின்னால் எழில் மிக்க வியப்பு போன்ற அமைப்பு உருவாக்கப்பட்டுள்ளது. தோள்களில் வாகுவலயம், கைகளில் கடகம், மார்பில் மாலைகள், இடுப்பில் கடிபந்தம் போன்ற அணிகலன்

களால் அவர்கள் அழகு செய்யப்பட்டுள்ளனர். மார்பில் முப்புரி நூல் குறுக்காக இடப்புவரை இடப்புறம் இருந்து வலப்புறம் காணப்படுகிறது. இவை இரண்டும் நல்ல கலைவடிவங்களாம்.

குடைவரையின் முகப்பில் இரு அரைத்தூண்கள் மட்டுமே உள்ளன; குடைவரைக் கோயில்களில் பொதுவாக முகப்பில் தூண்களும் அரைத்தூண்களும் அமைப்பது மரபு. ஆனால் இங்கு தூண்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. அரைத் தூண்களை ஒட்டி நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகைகள் உருவாக்கப்பட்டுள்ளன. முகப்பில் அரைத் தூண்களை ஒட்டி வெளிப்புறத்தில் இரு புரைகள் உள்ளன.

இடப்புறம் உள்ள புரையில் நான்கு கைகளைக் கொண்ட எழில்மிக்க பிள்ளையார் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளான். பின்வலக்கையில் பாசம், பின்இடக்கையில் அங்குசம், முன்வலக்கையில் அவனுக்கு விருப்பமான மோதகம் காணப்படுகின்றன. முன்இடக் கையில் உள்ளது தெளிவாகத் தெரியவில்லை. கைகளில் கடகம், தோள்களில் வாகுவலயம், மார்பில் இடப்புறம் முதல் வலப்புறம் வரை குறுக்காக முப்புரிநூல், தலையில் கரந்த மகுடம் ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன. பரந்த இரு காதுகளைக் கொண்ட இவன் யோக நிலை யில் அதாவது இரண்டு கால்களும் மடக்கி உட்கார்ந்த நிலையில் உள்ளன.

வலப்புறம் உள்ள புரையில் இரு கைகளைக் கொண்ட வடிவம் சுகாசனத்தில் அமைக்கப்பட்டுள்ளது. வலக்கை தொடையின் மீதும், இடக்கையில் பாம்பு சுற்றிய தடியும் உள்ளன. மார்பில் இடப்புறத்திலிருந்து வலக் கைமேல் முப்புரி நூல் காணப்படுகிறது. கைகளில் கடகம், தோள்களில் வாகுவலயம் அழகாக அமைந் துள்ளன. இவையன்றி, கழுத்தில் மாலை, காதுகளில் குண்டலங்கள், தலையில் கரந்த மகுடம் காணப்படுகின்றன;

அவன் அணிந்துள்ள ஆடை தெளிவாக உருவாக்கப்பட்டுள்ளது. இடக்காதுக்கு அடியில் ஆடை மடங்கிய நிலை நல்ல முறையில் காட்டப்பட்டுள்ளது. வட்டமான முகத்தினை உடைய இந்த வடிவம் சண்டி கேசுவரராம்.

குடைவரைக்கு முன்னால் மண்டபம் கட்ட ஏற்றவாறு அதன் மேற்புறத்தில் துளைகள் அமைக்கப்பட்டுள்ளன. இங்கு நந்தியைத் தனியாக உருவாக்கி வைக்கப்பட்டுள்ளது.

பாண்டியர்களது எழில்மிக்க குடைவரைகளில் இதுவும் ஒன்று.

---

## 25. மாங்குளம் குடைவரைக் கோயில்

மதுரையினின்றும் மேலூர் செல்லும் வழியில் பதினேழு கிலோ மீட்டர் தொலைவில் கத்தைப்பட்டி என்ற ஊர் உள்ளது. அங்கிருந்து பிரியும் சாலையில் எட்டு கிலோ மீட்டர் தொலைவில் மாங்குளம் என்ற சிற்றூர் உள்ளது. ஊரை அடுத்துள்ள மலையில் மேற்கு நோக்கி இயற்கையாக அமைந்துள்ள சரிவில் குடைவரைக் கோயிலை உருவாக்கும் முயற்சி மேற்கொள்ளப் பட்டுள்ளது.

குடைவரையின் முகப்பு இரண்டு தூண்களையும் இரண்டு அரைத் தூண்களையும் கொண்டது. தூண் களும் அரைத் தூண்களும் சதுரம், எட்டுப்பட்டை என்று பகுக்கப்படவில்லை. இவற்றின் இடையில் உருவாக்கப்பெற்ற போதிகைகள் கோண வடிவைக் கொண்டுள்ளன. குடைவரையை உருவாக்குவதில் முகப்பில் தூண்கள் மற்றும் அரைத்தூண்கள் அமைத்த துடன் வேலை நின்றுவிட்டது. காரணம் தெரிய வில்லை.

# 26. வரிச்சூர் குடைவரைக் கோயில்கள்

மதுரையினின்று சிவகங்கை செல்லும் வழியில் பதினேழு கிலோ மீட்டர் தொலைவில் வரிச்சூர் என்ற ஊர் உள்ளது. அங்கிருந்து களிமங்கலம் என்ற ஊருக்குப் பிரிந்து செல்லும் சாலையில் ஏறக்குறைய ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள குன்னத்தூர் என்ற ஊரை அடுத்து மலை ஒன்று உள்ளது. அதன் இருபுறங்களிலும் இரு குடைவரைக் கோயில்கள் உள்ளன. குடைவரைக் கோயில் உள்ளமலையின் கிழக்குப்பகுதி, சூரியன் கிழக்கில் உதிப்பதால், உதயகிரி என்ற சொல்லப் படுகிறது. இரண்டாவது குடைவரைக் கோயில் உள்ள மலையின் மேற்குப்பகுதி, சூரியன் மேற்கில் மறைவதால், அஸ்தகிரி என்று அழைக்கப் பெறுகிறது. இந்த மலைக்கு சற்றுத் தொலைவில் உள்ள மற்றொரு மலையில் மேலும் இரு குடைவரைக் கோயில்கள் உருவாகக்கப்பட்டுள்ளன.

கிழக்கு நோக்கியுள்ள உதயகிரியில் அமைக்கப் பட்டுள்ள குடைவரைக் கோயில் கருவறையை மட்டும் கொண்டது. பாண்டியர்கள் பாணியில் குடைவரைக் கோயிலின் ஒரு பகுதியாகக் கருவறையில் இலிங்கத் திருவுரு செதுக்கப்பட்டுள்ளது. சதுரமான அமைப்பை உடைய ஆவுடையாரில் அபிடேக நீர் செல்ல வழி செய்யப்பட்டுள்ளது.

குடைவரையின் முகப்பில் இரு புறமும் உள்ள புரைகளில் இரு கைகள் கொண்ட வாயிற்காப்போர் இருவர் உள்ளனர். திரிபங்க நிலையில் நிற்கும் வலது பக்கம் உள்ள வாயிற்காப்போர் மாமல்லன் பாணியில் நேராகப் பார்க்கிறார். அவர்தன் கதையின் மீது சாய்ந்து காணப்படுகிறார்; இடப்புறம் உள்ளவரும்

திரிபங்க நிலையில் நின்ற நிலையில் அமைக்கப்பட்டு உள்ளார். இவர்கள் இருவரும் சரிவர உருவாக்கப் படவில்லை.

வலப்புறம் உள்ள புரையை ஒட்டி தெற்கு நோக்கிய பாறையில் பிள்ளையார் அமைக்கப்பட்டுள்ளான். இருகைகள் உடைய இவனும் சரியாக அமைக்கப் படவில்லை. கருவறைக்கு முன்னால் நந்தி தனியாக உள்ளது.

மேற்கு நோக்கியுள்ள அஸ்தகிரியில் உருவாக்கப் பெற்றுள்ள குடைவரைக் கோயில் கருவறையைமட்டும் கொண்டது. இங்குள்ள கருவறையில் உள்ள இலிங்கத் திருவுருவும் பாறையின் ஒரு பகுதியாகக் காணப்படுகிறது. சதுரமான ஆவுடையாரில் அபிடேக நீர் செல்ல வழி அமைக்கப்பட்டுள்ளது.

முகப்பில் சதுரம், எட்டுப்பட்டை என்று பகுக்கப் படாத இரு அரைத்தூண்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றின் இடையில் அமைக்கப்பட்ட போதிகை வட்ட வடிவினைக் கொண்டது. வலப்புறம் உள்ள போதிகையில் தரங்க அமைப்பும் நடுவில் பட்டையும் காணப்படு கின்றன. ஆனால் அவை முழுமை பெறவில்லை.

முகப்பின் வலப்புறம் சிறிய விமானம் அமைக்கப் பட்டுள்ளது. இடப்புறமும் அத்தகைய விமானம் அமைக்கும் வேலை மேற்கொள்ளப்பட்ட நிலை காணப் படுகிறது. விமான அமைப்பினை உடைய இத்தகைய அமைப்பினை மாமல்லபுரத்தில் உள்ள இராமனுச மண்டபத்தில் காணலாம். குடைவரைக் கோயிலுக்கு முன்னால் நந்தி தனியாக வைக்கப்பட்டுள்ளது.

உதயகிரி மற்றும் அஸ்தகிரிக்குச் சற்று தொலைவில் உள்ள மலையில் உள்ள மூன்றாவது குடைவரைக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இது கருவறைப்

மட்டும் கொண்டது. இதை ஒட்டிப் பிற்காலத்தில் மண்டபம் கட்டப்பட்டுள்ளது. கருவறையின் ஒரு பகுதியாக உருவாக்கப்பெற்ற இலிங்கத்திருவுருவின் பெயர் நீலகண்டேசுவரர் என்பதாம் இங்குள்ள ஆவுடையாரும் ஏனைய இரண்டு குடைவரைக் கோயில் களில் உள்ளவை போன்று சதுர அமைப்பை உடையது.

முகப்பின் இருபுறமும் இரு அரைத்தூண்களைக் கொண்ட புரைகள் உள்ளன. சதுரம் மற்றும் எட்டுப் பட்டை எனப்பகுக்கப்படாத இவற்றின் இடையில் கோணவடிவம் உடைய போதிகைகள் உருவாக்கப் பட்டுள்ளன. இங்கு இரு கைகள் உடைய வாயிற் காப்போர் அமைக்கப்பட்டுள்ளனர். வலப்பக்கத்தில் உள்ளவர் கதை மீது சாய்ந்து நின்றும், இடப்புறம் உள்ளவர் தன் இடக்கையில் மலரைப் பிடித்துக் கொண்டு மாமல்லன் பாணியில் நேராகப்பார்க்கிறார்.

வலப்புறம் உள்ள வாயிற்காப்போரை அடுத்து பிள்ளையார் புடைசிற்பமாகக் காணப்படுகிறான். தாமரை இருக்கையில் அமர்ந்துள்ள இவனது துதிக்கை வலம்புரியாக உள்ளது. முன் வலக்கையில் மோதகமும், முன் இடக்கை வயிற்றின் மீதும், பின் வலக்கையில் ஒலைச் சுவடியும் உருவாக்கப்பட்டுள்ளன. இந்த வடிவம் அழகாக அமைக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

மேலே குறிப்பிட்டுள்ள குடைவரைக் கோயிலை அடுத்து கிழக்கு நோக்கியுள்ள பாறையில் நான்காவது குடைவரைக்கோயில் உள்ளது. அது தூண்கள், அரைத் தூண்கள் ஏதும் இன்றி சதுர அமைப்பைக் கொண்டது. பாறையின் பின்சுவரில் [வீரபத்திரரும், ஏழு மங்கையரும் [சப்தமாதர்கள்] புடைசிற்பமாக உருவாக் கப்பட்டுள்ளனர். இதற்கு முன்னால் பிற்காலத்தில் மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

உட்புறமாகக் குடையப்பட்ட பாறையின் தென் புறத்தில் வீரபத்திரர் இருகைகளுடன் அமைக்கப்பட்டு உள்ளான். உத்குடி இருக்கையில் உட்கார்ந்து இருக்கும் இவனுக்குப் பின்னால் காளை ஊர்தியும் ஆகம விதிகளின்படி காணப்படுகிறது. இவனது வலக்கை அபயமுத்திரையில் இருக்க, இடக்கை தொடை மீது உள்ளது. சிவபெருமானைப் போன்று இவனது வலக் காதில் ஆண்களுக்கு உரிய குண்டலமும், இடக்காதில் பெண்களுக்கு உரிய குழையும் அணி செய்கின்றன. அச்சத்தை அளிக்கும் வகையில் இருக்க வேண்டிய வீரபத்திரரை ஏழுமங்கையருடன் அமைத்தால், அவனது முகத்தில் அமைதி தவழவேண்டும் என ஆகமங்கள் கூறுகின்றன. அதற்கு ஏற்ப இவன் சாந்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளான். ஆனால் ஆகமங்களில் இவனுக்கு நான்கு கைகளும், தாமரை இருக்கையும் விதிக்கப்பட்டிருக்க இங்கு இவன் இருகைகளுடன் உத்குடி இருக்கையில் உருவாக்கப்பட்டுள்ளான். மேலும் ஏழு மங்கையருடன் பிள்ளையாரை உருவாக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பாறையின் மேற்புறத்தில் வராகி உட்பட 6 மங்கையர்களும், வடபுறத்தில் நரசிம்மியும் புடை சிற்பமாக உள்ளனர். இவர்களின் தலைகளில் மகுடங்கள் இலங்க, காதுகளில் நீண்ட காதணிகள் அழகு செய்கின்றன. இவர்களது கொங்கைகளின் மேல் கச்சு அமைக்கப்பட்டுள்ளது. நரசிம்மி நீங்கலாக ஏனையோர் ஆகம விதிகளின்படி சுகாசனத்தில் உட்கார்ந்து இருப்பினும், அவற்றில் கூறப்பட்ட நான்கு கைகளுக்குப் பதில் இரண்டு கைகளுடன்தான் காணப்படுகின்றனர். இவர்களது வலக்கைகள் அபயமுத்திரையிலும், இடக் கைகள் தொடைமீதும் உள்ளன. நரசிம்மி மட்டும் உத்குடி இருக்கையில் உருவாக்கப்பட்டுள்ளாள். இவளது வலக்கையில் மட்டும் வாள் அமைக்கப்பட்டுள்ளது.

ஏனையோரைப்போன்று இவனது இடக்கை தொடை மீது காணப்படுகிறது.

ஏழுமங்கையர் குழுவில் பொதுவாக நரசிம்மி காணப்படுவதில்லை. இங்கு அந்த வடிவம் உள்ளது: வராகி மற்றும் நரசிம்மி ஆகிய இருவரை மட்டும் அமைப்பினைக் கொண்டு இன்னார் என்று உறுதியாகச் சொல்லமுடிகிறது. அந்தந்த மங்கையர்கள் தொடர்புடைய ஆண் கடவுள்களின் படைக்கலமோ அல்லது ஊர்தியோ அல்லது வேறு அடையாளங்களோ [பிரமாவிற்கு நான்கு தலைகள் போன்று] இங்குள்ள மங்கையருடன் உருவாக்கப்படவில்லை: எனவே இவர்களை இன்னார் என்று உறுதிப்படுத்த இயலவில்லை.

பாண்டியர் பாணியில் அமைக்கப்பெற்ற இவை எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தனவாகக் கொள்ளலாம்.

# 27. திருச்சுழியல் குடைவரைக் கோயில்

அருப்புக் கோட்டையினின்றும் ஏறக்குறைய பதினான்கு கிலோ மீட்டர் தொலைவில் திருச்சுழியல் என்னும் தலம் உள்ளது. பாண்டிய நாட்டுப்பாடல் பெற்ற 14 திருத்தலங்களில் ஒன்றான இது சுந்தரமூர்த்தி சுவாமி களால் திருப்பதிகம் பாடப்பெற்றது. மேலும் பகவான் ரமண மகரிஷி பிறந்த பதி இது. இங்கிருந்து பாறைக் குளம் என்ற சிற்றூருக்குச் செல்லும் வழியில் ஏறக்குறைய இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் இருப்புப் பாதையை அடுத்துள்ள குன்றில் குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது.

குன்றின் அடிவாரத்தில் மேற்கு நோக்கி குடைவரைக் கோயில் அமைந்துள்ளது. இது கருவறையை மட்டும் கொண்டது. இதன் நுழைவாயிலை ஒட்டி உருவாக்கப்பெற்றுள்ள தூண்கள் முற்றுப்பெறாத நிலையில் காணப்படுகின்றன. கருவறையின் உள்ளே பாறையிலேயே இலிங்கத்திருவுரு உருவாக்கப்பட்டு உள்ளது. இறைவனது திருப்பெயர் பன்னக கிரீசுவரர் என்பதாம். சதுரமான ஆவுடையார் மேல் இலிங்கத் திருவுரு அமைந்துள்ளது. குடைவரையை ஒட்டிப் பிற்காலத்திய மண்டபம் ஒன்று காணப்படுகிறது.

———

# 28. மூவரை வென்றான் குடைவரைக் கோயில்

மதுரையினின்றும் திருவில்லிபுத்தூர் செல்லும் வழியில் மூவரைவென்றான் பிரிவினின்றும் ஏறக்குறைய மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மலையின் மேல் பகுதியில் உள்ள சரிவில் குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது. விருதுநகரினின்றும் பேருந்து மூலம் காடாம்பாறை சென்று, அங்கிருந்து ஏறக்குறைய ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள குடைவரையை அடையலாம். இதை ஒட்டி நந்தியுடன் கூடிய மண்டபம், நவகோள் மண்டபம், அன்னையின் திருமுன் ஆகியவை பிற்காலத்தில் கட்டப்பட்டுள்ளன. அன்னையின் திருப் பெயர் மரகதாம்பிகை என்பதாம்.

கிழக்கு நோக்கி அமைந்துள்ள குடைவரையின் முகப்பு இரண்டு தூண்கள் மற்றும் இரண்டு அரைத் தூண்களைக் கொண்டது. தூண்கள் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டை உடையதாகவும் உருவாக்கப்பட்டுள்ளன. தூண்களின் போதிகை கோண வடிவினைக் கொண்டது. இவற்றின் சதுர அமைப்பு களில் தாமரை இதழ்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

கருவறையில் சதுரமான ஆவுடையாருடன் கூடிய இலிங்கத்திருவுரு காணப்படுகிறது. இறைவனின் திருப்பெயர் மலைக்கொழுந்தீசர் என்பதாம். கருவறையின் வாயிலின் இருபுறமும் புரைகள் உருவாக் கப்பட்டுள்ளன, வலப்புறம் உள்ள புரையில் விநாயகரும், இடப்புறம் உள்ள புரையில் முருகனும் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளனர்.

நான்கு கைகளைக் கொண்ட பிள்ளையார் யோக நிலையில் அமைக்கப்பட்டுள்ளான்; அவனது முகம்

சிதைந்துள்ளது. நான்கு கைகள் கொண்ட முருகனது முன் வலக்கை அபய முத்திரையிலும், முன்இடக்கை வரத முத்திரையிலும், பின்வலக்கையில் வச்சிரமும், பின்இடக்கையில் சக்தியும், தலையில் கரந்த மகுடமும் காணப்படுகின்றன. பாம்பை வாயில் கொண்ட அவனது ஊர்தியான மயில் அவனுக்குப் பின்னால் அமைக்கப் பட்டுள்ளது. பிள்ளையார் மற்றும் முருகன் வடிவங் களுக்கு மேல் இரு இமையவர்கள் பறந்த நிலையில் உருவாக்கப்பட்டுள்ளனர்.

மண்டபத்தில் தெற்கு நோக்கிய பாறையில் உள்ள புரையில் சிவகாமியுடன் ஆடல் வல்லான் புடை சிற்பமாகக் காணப்படுகிறான். அவனது நான்கு கைகளில் முன்வலக்கை அபயமுத்திரையிலும், முன் இடக்கை காலைச் சுட்டிக் காட்டிய நிலையிலும். பின் வலக்கையில் உடுக்கையும், பின்இடக்கையில் தீயும் உள்ளன. தலையில் சடாமகுடம் அமைந்து இருப்பினும், அதன் இருபுறமும் விரிந்த நிலையில் உள்ள சடை அவனது நடனமாடும் நிலையைக் குறிக்கிறது. இடக் காலைத் தூக்கி, வலக்காலை முயலகன் மீது ஊன்றி உள்ளான். இரு கைகள் கொண்ட அன்னை திரிபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் ஆடல்வல்லான் அருகில் அமைக்கப்பட்டுள்ளான். அவளது தலையில் கரந்த மகுடம் விளங்க, வலக்கையில் தாமரை மலரும், இடக்கை கத்ய வலம்பித முத்திரையிலும் உள்ளன.

முருகன் மற்றும் ஆடல்வல்லான் வடிவங்கள் காணத்தக்கனவாம். இவற்றின் அமைப்பைக் கருத்தில் கொண்டால், இவை குடைவரைக் கோயில் உருவாக்கப் பட்ட காலத்தைச் சார்ந்தன அல்ல; பிற்காலத்தில் அமைக்கப்பட்டவை என்பது தெளிவாகத் தெரிகிறது.

———

## 29. திருத்தங்கல் குடைவரைக் கோயில்

அருப்புக் கோட்டையினின்றும் சிவகாசி செல்லும் வழியில் சிவகாசியினின்றும் ஏறக்குறைய ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் திருத்தங்கல் என்ற ஊர் உள்ளது. இங்குள்ள மலையின் அடிவாரத்தில் குடைவரைக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது.

தெற்கு நோக்கி உருவாக்கப்பெற்றுள்ள குடைவரைக் கோயில் கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. இதன் முகப்பில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத் தூண்களும் காணப்படு கின்றன. குடைவரைக் கோயில்களில் பொதுவாகத் தூண்களும் அரைத் தூண்களும் மேலும் கீழும் சதுர மாகவும், நடுவில் எட்டுப்பட்டை கொண்டனவாகவும் இருக்கும். ஆனால் இங்குக் கீழ்ப்பகுதி மட்டும் சதுரமாக வும், நடு மற்றும் மேல் பகுதிகள் எட்டுப்பட்டை உடையனவாக உள்ளன. தூண்கள் மற்றும் அரைத் தூண்களுக்கு இடையில் கோண வடிவில் போதிகைகள் அமைக்கப்பட்டுள்ளன. கருவறையின் நுழைவாயிலுக்கு இருபுறமும் பெரிய அளவிலான புரைகள் காணப்படு கின்றன. அங்கு ஒருகால் வாயிற்காப்போரைப் புடை சிற்பமாக உருவாக்க எண்ணி இருக்கலாம்.

கருவறையில் உள்ள திருமால் தனக்கே உரிய படுத்த நிலையில் காணப்படுகிறான். அவன் ஐந்து தலைகள் கொண்ட ஆதிசேடன் மீது பள்ளி கொண்டுள் ளான். புடைச் சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ள அரங்க நாதன், ஆதிசேடன் ஆகியோர் மீது வர்ணப் பூச்சு காணப்படுகிறது. அவ்வப்போது வர்ணம் பூசப்படுவ தாகத் தெரிகிறது. இரண்டு கைகள் கொண்ட அரங்க நாதனின் வலக்கை மடித்த நிலையில் தலைக்கு

அருகிலும், இடக்கை நீட்டிய நிலையிலும் காணப்படு கின்றன. இவனது காலடியில் ஏற்கனவே அமைக்கப் பட்ட திருமகள் மற்றும் பூமகள் ஆகியோரின் வடிவங்கள் சிதைந்துவிட்டமையால், புதிதாக வேறு வடிவங்கள் செய்துவைக்கப்பட்டன என்று சொல்லப்படுகிறது. கருவறையின் உள் சுற்றுச் சுவர்களில் பிரமா, தும்புரு ஆகியோர் ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளனர். அரங்கநாதனின் தலைக்கு அருகில் மார்க்கண்டேயர் வடிவம் காணப்படுகிறது. இவனைச் சுற்றி பரிவார தெய்வ வடிவங்கள் அதிகம் இல்லாததால், இந்த வடிவை மத்திய வகுப்பைச் சேர்ந்ததாகக் கருதலாம்.

குடைவரைக் கோயிலை ஒரு பகுதியாகக் கொண்டு திருமாலுக்குப் பெரிய அளவில் கோயில் கட்டப் பெற்றுள்ளது. இதனை அடுத்து மலைமீது சிவ பெருமானுக்கும் ஒரு கோயில் அமைந்துள்ளது.

---

# 30. செவல் பட்டி குடைவரைக் கோயில்

சிவகாசியினின்றும் திருவேங்கடம் செல்லும் வழியில் செவல் பட்டி என்ற சிற்றூர் உள்ளது. ஊரினின்றும் ஏறக்குறைய ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மலையின் மேல் பகுதியில் உள்ள சரிவில் கிழக்கு நோக்கி குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது.

குடைவரையின் முகப்பு இரண்டு தூண்கள் மற்றும் இரண்டு அரைத் தூண்களைக் கொண்டது. அவற்றின் மேல் பகுதியும் கீழ்ப் பகுதியும் சதுரமாகவும், நடுவில் எட்டுப்பட்டை கொண்டதாகவும் உள்ளது. நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகை அமைக்கப் பட்டுள்ளது. சதுரங்களில் தாமரை இதழ்கள் உருவாக்கப் பட்டுள்ளன. குடைவரை கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. வடக்கு நோக்கி அமைந் துள்ள கருவறையில் இலிங்கத் திருவுரு ஏதும் இல்லை;

கருவறையின் முன்னால் உள்ள இரு புரைகளில் இரு கைகளுடன் கூடிய வாயிற் காப்போர் புடைச் சிற்ப மாக உள்ளனர், மகேந்திரவர்மன் பாணியில் சாய்ந்த நிலையில் உள்ள அவர்கள் திரிபங்க நிலையில் நின்றபடி காணப்படுகின்றனர். அவர்களது தலையில் அழகான மகுடம் போன்ற அமைப்பு காணப்படுகிறது. அவர்களது மீசை நல்ல முறையில் உருவாக்கப்பட்டுள்ளது. மேல் புறம் உள்ளவரின் மார்பில் முப்புரி நூல் இடத் தோளி லிருந்து வலக்கை மேல் இருக்க, வலக்கை இடுப்பில் ஊன்றியும், இடக்கையில் மழுவும் உள்ளன. கீழ்ப்புறம் உள்ளவரின் வலக்கை கதை மீதும், இடக்கை வலக்கை அக்குளிலும் காணப்படுகின்றன. மார்பில் முப்புரி நூல் இடத்தோள் மீது காணப்படுகிறது. இருவரின் காது களில் குண்டலங்களும், மார்பில் மாலைகளும், இடுப்பில்

சலங்கையாலான மாலைகளும், வயிற்றில் உதரபந்தமும் உருவாக்கப்பட்டுள்ளன.

மண்டபத்தின் பின் சுவரில் மூன்று புரைகள் காணப் படுகின்றன. வடபுறம் உள்ள புரையில் உருவம் ஏதும் இல்லை. நடுவில் உள்ள புரையில் திருமாலும், தென் புறம் உள்ளதில் பிள்ளையாரும் உருவாக்கப்பட்டுள்ளனர். உட்கார்ந்த நிலையில் உள்ள பிள்ளையாரின் இரு கைகளில் வலக்கையில் போதகமும், இடக்கை தொடை மீதும் உள்ளன. தலையில் கரந்த மகுடம், மார்பில் முப்புரி நூல் (இடத்தோள் மீது), கைகளில் கடகம், தோள்களில் வாகுவலயம், வயிற்றில் உதரபந்தம் ஆகியவை காணப்படுகின்றன.

நடுவில் உள்ள புரையில் உருவாக்கப்பட்டுள்ள திருமாலின் கிரீடமகுடம் எழிலினை உடையதாக அமைக்கப்பட்டுள்ளது. காதுகளில் நீண்டகுண்டலங்கள், கைகளில் கடகம், தோள்களில் அழகான வாகுவலயம், கழுத்தில் மாலை, மார்பில் முப்புரிநூல் (இடத் தோள் மீது) காணப்பட, ஆடைதெளிவாக உருவாக்கப்பட்டு உள்ளது. நான்கு கைகள் கொண்ட இந்த வடிவின் பின்வலக்கையில் சக்கரம், பின்இடக்கையில் சங்கு, முன் இடக்கை கடிமுத்திரையில் இருக்க, முன்வலக்கையின் உள்ளங்கை மேல் நோக்கி இருக்க இடுப்பில் வைக்கப் பட்டுள்ளது.

கருவறைக்கு எதிரில் உள்ள மண்டபத்தின் தென் புறச்சுவரில் உள்ள புரையில் நான்கு கைகள் கொண்ட ஆடல்வல்லான் வடிவம் புடைச் சிற்பமாகக் காணப் படுகிறது. பின்வலக்கையில் உடுக்கையும், பின்இடக் கையில் தீயும் உள்ளன. முன்வலக்கை சற்று நீட்டி தொங்கிய நிலையில் இருக்க, முன் இடக்கை மேலே நோக்கி காணப்படுகிறது. அதன் விரல்கள் எதிர்ப்புறம் இருப்பவரை நோக்கி மடங்கி இருக்கிறது. அவனது

தலையில் உள்ள சடையின் அமைப்பு ஆடல் வல்லான் தலையில் பொதுவாகக்காணப்படும் அமைப்பை போன்று இல்லாது வீரசிகாமணி குடைவரைக் கோயில் போன்ற வற்றிலுள்ள வாயிற்காப்போரின் தலை அமைப்பைப் போன்று உள்ளது குறிப்பிடத்தக்கது. காதுகளில் குண்டலங்கள் காணப்பட, கால்கள் சுவஸ்திக் முத்திரையில் அமைந்து உள்ளது. கைகளில் கடகம், கழுத்தில் ஒரு மாலை மட்டும் உள்ளது. அதிகமான அணிகலன்கள் உருவாக்கப்படவில்லை. இவனது காலடியில் முயலகன் இல்லை. இவற்றைக் கருத்தில் கொண்டால், இதை ஆடல் வல்லானின் தொன்மையான வடிவங்களில் ஒன்றாகக் கொள்ளலாம்.

---

# 31. குறத்தியறை குடைவரைக் கோயில்

நாகர் கோயிலின்றும் காட்டுப்புதூர், கடுக்கரை, திடல் ஆகிய ஊர்களுக்குச் செல்லும் வழியில் குறத்தியறை என்ற ஊர் உள்ளது. இது அழகிய பாண்டிய புரம் அடையும் முன்பு உள்ள பிரிவில் இருந்து ஏறத்தாழ ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. ஊரை அடுத்துள்ள மலையில் தெற்கு நோக்கிக் குடைவரை உருவாக்கப்பட்டுள்ளது.

குடைவரை கருவறையை மட்டும் கொண்டது. இதன் பின்சுவரில் சரிவர அமைக்கப்படாத இரு அரைத்தூண்களுக்கு இடையில் திருமால் வடிவம் புடைச் சிற்பமாக உள்ளது. 4 கைகள் கொண்ட இவனது பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் காணப்பட, முன்இருகைகள் கடிமுத்திரையில் உள்ளன. இவன் சமபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிறான். இந்த வடிவம் சரியாக உருவாக்கப் படவில்லை.

குடைவரைக்கு வெளிப்புறத்தில் வலப்புறமாக வலம்புரிப் பிள்ளையார் புடைச் சிற்பமாக உள்ளான். ஐந்து முகங்களைக் கொண்ட வடிவமாக இது காணப்படு கிறது. இடப்புறம் உள்ள சரிவர உருவாக்கப்படாத வடிவம் ஔவையார் அம்மை என்று அழைக்கப்படுகிறது.

# 32. சிவகிரி குடைவரைக் கோயில்

நாகர் கோயிலினின்றும் ஆழ்வார் கோயிலுக்கு நகரப்பேருந்து வசதி உள்ளது. இது இரணியல் என்ற ஊரினின்றும் ஏறக்குறைய 1½ கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. ஊரை ஒட்டியுள்ள குன்று சிவகிரி எனப்படுகிறது. இங்குக் கிழக்கு நோக்கிக் குடைவரைக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. இதற்கு முன்னால் பிற்காலத்தில் மண்டபம், மடப்பள்ளி ஆகியவை கட்டப்பட்டுள்ளன. இங்கு நந்தி, பிள்ளையார் ஆகியோர் காணப்படுகின்றனர்.

குடைவரை கருவறையை மட்டும் கொண்டது. ஏனைய குடைவரைகளில் காணப்படுவது போன்று, தூண்கள், அரைத்தூண்கள், வாயிற்காப்போர் இங்கு இல்லை. கருவறையின் உள்ளே பாறையிலேயே இலிங்கத் திருவுரு சதுரமான ஆவுடையார் மேல் உருவாக்கப்பட்டுள்ளது. இறைவனது திருப்பெயர் சிவகிரிநாதர் என்பதாம்.

இந்த ஊரை அடுத்து வள்ளியாறு என்ற ஆறு ஓடுகிறது. ஆற்றில் வெள்ளம் வந்தால், கோயில் வெள்ளத்தில் முழுகிவிடுகிறது. அவ்வமயம் ஊரினின்றும் வேறுவழியில் குன்று மேல் சென்று பூசை நடைபெறுகிறது.

## பொது

சென்னையை அடுத்துள்ள மாமல்லபுரத்தில் உள்ள குடைவரைக்கோயில்களும், மலை தளிகளும் யாவரும் அறிந்த ஒன்று. மாமல்லபுரத்தில் உள்ளவற்றைத்தவிர தமிழகத்தில் 70 குடைவரைக்கோயில்களும் ஒரு மலை தளியும் உள்ளன. இவை ஒவ்வொன்றைப் பற்றியும்

நேரில் கண்டறிந்தவற்றை தனித்தனியாக விரிவாக இதுவரை கொடுக்கப்பட்டன. இனி அவற்றைப் பற்றிய பொதுவான தன்மைகளையும், சிறப்புகளையும் காண்போம்:

## குடைவரைக்கோயில்கள் உள்ள இடங்கள்

குடைவரைகளும் மலை தளியும் உள்ள இடங்களும், மாவட்டங்களும் :—

### 1. செங்கல்பட்டு அண்ணா மாவட்டம்

1. திருக்கழுக்குன்றம்
2. சிங்கப்பெருமாள்கோயில்
3. வல்லம்-குடைவரைகள்—3
4. பல்லாவரம் — 6

### 2. தென் ஆற்காடு மாவட்டம்

1. அறைகண்டநல்லூர்
2. கீழ்மாவிலங்கை
3. மண்டகப்பட்டு
4. மேலச்சேரி
5. தளவனூர்
6. சிங்காவரம் — 6

### 3. வடஆற்காடு மாவடடம்

1. திரைக் கோயில்
2. சீயமங்கலம்
3. விளாப்பாக்கம்
4. குரங்கணில் முட்டம்
5. மகேந்திரவாடி
6. மாமண்டூர் - குடைவரைகள் — 4 — 9

21

சிவகிரி குடைவரைக் கோயில் 93

21


## 4. சேலம் மாவட்டம்

1. நாமக்கல் - குடைவரைகள் — 2 2


## 5. திருச்சி மாவட்டம்

1. திருவெள்ளரை - குடைவரைகள் — 2
2. திருச்சி - குடைவரைகள் 2
3. திருப்பைஞ்ஞீலி
4. தான்தோன்றிமலை 6


## 6. புதுக்கோட்டை மாவட்டம்

1. திருமெய்யம் - குடைவரைகள்—2
2. நார்த்தாமலை -குடைவரைகள்—2
3. திருக்கோகர்ணம்
4. குடுமியான் மலை
5. தேவர் மலை
6. பூவாலக்குடி
7. மலையக்கோயில் - குடைவரைகள் — 2
8. குன்னாண்டார் கோயில்-குடைவரைகள்—3
9. மலையடிபட்டி-குடைவரைகள்—2
10. சித்தன்னவாசல் 16


## 7. பசும் பொன்முத்துராமலிங்க மாவட்டம்

1. பிரான்மலை
2. பிள்ளையார்பட்டி
3. திருக்கோளக்குடி
4. குன்றக்குடி - குடைவரைகள்—3
5. மகிபாலன்பட்டி

45

45

6. திருமலை
7. அரளிப்பட்டி 9

## 8. மதுரைமாவட்டம்

1. ஆனைமலை - குடைவரைகள்—2
2. திருப்பரங்குன்றம்குடைவரைகள்—2
3. மாங்குளம்
4. அரிட்டாபட்டி
5. வரிச்சூர்குடைவரைகள்—4 10

## 9. காமராசர் மாவட்டம்

1. மூவரைவென்றான்
2. செவல்பட்டி
3. திருச்சுழியல்
4. திருதங்கல் 4

## 10. திருநெல்வேலி மாவட்டம்

1. மலையடி குறிச்சி
2. பேச்சிப்பாறை
3. திருமலாபுரம் - குடைவரைகள்—2
4. வீரசிகாமணி
5. கங்கைகொண்டான் குடைவரைகள்—2
6. ஆனையூர் 8

## 11. கன்னியாகுமரி மாவட்டம்

1. திருநந்திக்கரை
2. குறத்தியறை
3. சிவகிரி 3

79

மலைதனி

திருநெல்வேலி மாவட்டம்

கழுகுமலை

அவற்றின் அமைப்பு :

மேலே குறிப்பிட்ட குடைவரைகளில், பலநிலை களில் முற்றுப்பெறாத நிலையில் உள்ளவை :-

1. திருமாலபுரம்—2
2. கங்கை கொண்டான்—1
3. திரைக்கோயில்
4. திருவெள்ளறை—1
5. அறைகண்டநல்லூர்
6. விளாப்பாக்கம்
7. மாமண்டூர்—1
8. மாமண்டூர்—2
9. மாங்குளம்
10. குன்னாண்டார் கோயில்—2
11. குன்னாண்டார் கோயில்—3
12. பேச்சிப்பாறை.

ஏனையவற்றில் பல கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்டுள்ளன. ஒரு சிலவற்றில் கருவறை மட்டும் அமைக்கப்பட்டுள்ளது. வேறு சிலவற்றில் கருவறை, அர்த்தமண்டபம் மற்றும் முகமண்டபங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இரண்டு குடைவரைக் கோயில்கள் முன்மண்டபத்துடன் கூடிய கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றுடன் காணப் படுகின்றன.

கருவறை மட்டும் உள்ள குடைவரைக் கோயில்கள் :-

1. கங்கை கொண்டான்—2
2. தான் தோன்றிமலை
3. வல்லம் — 1
4. வல்லம் — 2
5. கீழ் மாவிலங்கை
6. திருச்சுழியல்
7. பிரான் மலை
8. மகிபாலன்பட்டி
9. அரளிப்பட்டி
10. வரிச்சூர்—1
11. வரிச்சூர் — 2
12. வரிச்சூர்—3
14. திருமெய்யம் —1
15. நார்த்தமலை—1
16. தேவர்மலை
17. பூவாலக்குடி
18. மலையக்கோயில்—2
19. மூவரை வென்றான்
20. குறத்தியறை
21. சிவகிரி.

கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றை உடைய குடைவரைக் கோயில்கள் :-

1. மலையடி குறிச்சி
2. திருமலாபுரம் — 1
3. வீரசிகாமணி
4. ஆனையூர்
5. திருநந்திக்கரை

6. நாமக்கல் — 1
7. நாமக்கல் — 2
8. திருவெள்ளறை — 2
9. சிங்கப்பெருமாள் கோயில்
10. திருப்பைஞ்ஞீலி
11. வல்லம் — 3
12. மேலச்சேரி
13. சிங்காவரம்
14. செவல்பட்டி
15. திருத்தங்கல்
16. பிள்ளையார்பட்டி
17. திருக்கோளக்குடி
18. குன்றக்குடி — 1
19. குன்றக்குடி — 2
20. குன்றக்குடி — 3
21. திருமலை
22. மாமண்டூர் — 4
23. ஆனைமலை — 1
24. ஆனைமலை — 2
25. திருப்பரங்குன்றம் 2
26. அரிட்டாபட்டி
27. திருமெய்யம் — 2
28. நார்த்தாமலை — 2
29. திருக்கோகர்ணம்
30. மலையக்கோயில் — 1

31. குன்னாண்டார் கோயில்—1
32. குடுமியான் மலை
33. மலையடிபட்டி—1
34. மலையடிபட்டி—2
35. சித்தன்னவாசல்

கருவறை, அர்த்த மண்டபம், முகமண்டபம் உள்ள குடைவரைக் கோயில்கள்:—

1. திருச்சி
2. திருக்கழுக்குன்றம்
3. சீயமங்கலம்
4. குரங்கணில் முட்டம்
5. மகேந்திரவாடி
6. மாமண்டூர் குடைவரை—3
7. திருப்பரங்குன்றம்
8. பல்லாவரம்
9. மண்டகப்பட்டு

கருவறை முன் சிறிய அளவிலான முகமண்டபம் மற்றும் மண்டபத்துடன் கூடிய குடைவரைக் கோயில்கள்: —

1. திருச்சி கீழ்க் குடைவரைக் கோயில்
2. தளவனூர்

உயிர்கள் வாழ்வதற்கு இன்றியமையாதவன் சூரியன். எனவேதான் மனிதன் நல்வாழ்விற்காகக் கட்டப்பட்ட திருக்கோயில்கள் சூரியன் உதிக்கும் திக்கான கிழக்கை நோக்கி எடுக்கப்பட்டன. கற்களால் கட்டப்பெற்ற கோயில்கள் பொதுவாக, கிழக்கு நோக்கி இருப்பினும், சில வேறு திக்குகளை நோக்கியும் உள்ளன. எடுத்துக்காட்டாக, புகழ்மிக்க பழனித்திருக்கோயில், அட்டவீரட்டதலங்களான திருக்கண்டியூர், திருக்கடவூர்

திருக்கோயில்கள் மேற்கு நோக்கியும், மணிவாசகப் பெருந்தகைக்குத் திருவருள் புரிந்த திருப்பெருந்துறை திருக்கோயில் தெற்கு நோக்கியும் உள்ளதை எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம். குடைவரைக் கோயில்களை இயற்கையாக அமைந்துள்ள மலைச்சாரலில்தான் உருவாக்க இயலும். எனவே இதைக் கிழக்கு நோக்கி மட்டும் அமைப்பது என்பது இயலாத ஒன்று. இருப்பினும் பெரும்பாலான குடைவரைக் கோயில்கள் கிழக்கு நோக்கித்தான் உள்ளன. மலையடிகுறிச்சி, திருக்கழுக்குன்றம், சீழ்மாவிலங்கை ஆகியவற்றைச் சான்றுகளாகக் கூறலாம். ஏனைய திக்குகளை நோக்கி உருவாக்கப்பட்டுள்ள குடைவரைக் கோயில்களுக்குச் சில உதாரணங்கள் :—

மேற்கு நோக்கி : மேலச்சேரி
ஆனைமலை — 2

தெற்கு நோக்கி : திருநந்திக்கரை
பல்லாவரம்

கிழக்கு அன்றி ஏனைய திக்கு நோக்கி உருவாக்கப் பட்ட குடைவரைக் கோயில்களில் உள்ள மண்டபங்களில் கிழக்கு அல்லது மேற்கு நோக்கி, கருவறைகள் அமைக்கப் பட்டுள்ளமை ஆங்காங்குக் காணப்படுகின்றன. எடுத்துக் காட்டாகத் தெற்கு நோக்கி உருவாக்கப்பெற்ற திருமலா புரம் 1 மற்றும் தளவனூர் குடைவரைகளில் உள்ள மண்டபங்களில் மேல்புறமாகக் கிழக்கு நோக்கிக் கருவறை களும், திருச்சிக் குடைவரையின் மண்டபத்தின் கீழ்ப் புறமாக மேற்கு நோக்கிக் கருவறையும் உருவாக்கப்பட் டுள்ளன. அதே தென்திக்கை நோக்கி அமைக்கப்பட்டுள்ள திருவெள்ளறை (1) மற்றும் திருச்சிக்கீழ் குடைவரைகளில் உள்ள மண்டபங்களில் இருபுறமும் அதாவது கிழக்கு மற்றும் மேற்குத் திக்குகளைக் நோக்கிக் கருவறைகள் உருவாக்கப்பட்டுள்ளன.

முகப்பு :

கருவறை மற்றும் மண்டபம் ஆகியவற்றைக் கொண்ட குடைவரைகளில் பெரும்பாலானவை இரு தூண்கள் மற்றும் இரு அரைத்தூண்களைக் கொண்ட முகப்பை உடையனவாக உள்ளன. சிங்கப் பெருமாள் கோயில், திருக்கோகர்ணம் குடைவரைகளை எடுத்துக் காட்டாகக் கூறலாம். இதனின்றும் வேறுபட்டு ஒரு சில குடைவரைகள் அமைக்கப்பட்டுள்ளன. உதாரணமாக அரிட்டாபட்டி குடைவரையின் முகப்பில் இரு அரைத் தூண்கள் மட்டுமே உள்ளன, தூண்களை உருவாக்க வில்லை. கருவறை மட்டும் கொண்ட வரிச்சூரில் உள்ள நான்காவது குடைவரை போன்றவற்றில் முகப்பில் தூண்களோ அல்லது அரைத்தூண்களோ அமைக்கப் படவில்லை.

ஒருசில குடைவரைகளின் முகப்பில் இரண்டுக்கு மேற்பட்ட தூண்கள் காணப்படுகின்றன. திருவெள்ளறையில் உள்ள இரண்டு குடைவரைகள், திருச்சி கீழ்க் குடைவரை, மற்றும் அரைகண்ட நல்லூர், திருச்சி, பல்லாவரம், மண்டகப்பட்டு ஆகிய இடங்களில் உள்ள குடைவரைகள் ஆகியவற்றின் முகப்பில் நான்கு தூண்கள் உருவாக்கப்பட்டுள்ளன. விளாப்பாக்கம் குடைவரையின் முகப்பில் 6 தூண்கள் காணப்படுகின்றன.

கருவறை, அர்த்தமண்டபம் மற்றும் முகமண்டபம் ஆகியவற்றைக் கொண்ட குடைவரைகளில் முதல் வரிசையில் எவ்வளவு தூண்கள், அரைத்தூண்கள் உள்ளனவோ அவ்வளவு இரண்டாவது வரிசையிலும் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாகச் சீயமங்கலம் குடைவரையில் இரண்டு வரிசைகளிலும் 2 தூண்களும், 2 அரைத்தூண்களும் உள்ளன. மண்டகப் பட்டுக் குடைவரையின் இரண்டு வரிசைகளிலும் 4 தூண்களும் 2 அரைத் தூண்களும் காணப்படுகின்றன. இந்த அமைப்பினின்றும் வேறுபட்டு, மாமண்டூர் முதல்

குடைவரையின் கிழக்கு நோக்கியுள்ள முகப்பில் முதல் வரிசையில் 5 தூண்களும், 2 அரைத்தூண்களும் காணப்பட, இரண்டாவது வரிசையில் 4 தூண்களும், 2 அரைத்தூண்கள் மட்டுமே உள்ளன. மேலும் நாமக்கல் முதல் குடைவரையில் முதல் வரிசையில் இரு தூண்களும் இரு அரைத்தூண்களும் இருக்க, இரண்டாவது வரிசையில் நான்கு தூண்களும், இரண்டு அரைத்தூண் களும் உருவாக்கப்பட்டுள்ளன.

மாமண்டூர் முதல் குடைவரையைத் தவிர ஏனையவை ஒரே முகப்பைத்தான் கொண்டுள்ளன. மாமண்டூரில் உள்ள முதல் குடைவரையில் கிழக்கு நோக்கி உள்ள முகப்பில் 5 தூண்களும், 2 அரைத் தூண்களும் இருக்க, தெற்கு நோக்கி உள்ள முகப்பில் இரு தூண்களும், இரு அரைத்தூண்களும் உள்ளன.

ஏனைய குடைவரைகளினின்றும் வேறுபட்டு, தளவானூர் குடைவரையின் முகப்பு தனி அமைப்புடன் விளங்குகிறது. முகப்பில் தூண்கள், மற்றும் அரைத் தூண்களுக்கு மேல் 5 கூடுகளுடன் கூடிய கபோதமும், கூடுகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கந்தரவர் தலையும் உருவாக்கப்பட்டுள்ளன. மேலும் தூண்களுக்கும் கபோதத்திற்கும் இடையில் மகர தோரணங்களும், அவற்றிற்கு இடையில் கந்தர்வர்களும் அமைக்கப் பட்டுள்ளனர்.

தூண்கள், மற்றும் அரைத்தூண்கள் : —

திருச்சி கீழ்க் குடைவரை, குடுமியான்மலை குடைவரை, மற்றும் மலையடிப்பட்டி இரண்டாவது குடைவரை ஆகியவை நீங்கலாக ஏனைய குடைவரை களில் உள்ள தூண்களும், அரைத்தூண்களும் பருமனான அமைப்பைக் கொண்டவையாம். ஒரு சில குடைவரை களில் தூண்கள் மட்டும் (மாமண்டூர் 4வது குடைவரை, குரங்கணில் முட்டம்) மேலும் கீழும் சதுரமாகவும்,

நடுவில் எட்டுப் பட்டையாகவும் பகுக்கப்பட்டிருக்கும். அரைத்தூண்கள் பகுக்கப்படாது உருவாக்கப் பட்டிருக்கும். திருமலாபுரம், சீயமங்கலம் ஆகிய இடங்களில் உள்ள குடைவரைகளில் உள்ள தூண்களும், அரைத்தூண்களும் சதுரங்களாகவும், எட்டுப்பட்டை யாகவும் பகுக்கப்பட்டுள்ளன. பேச்சிப்பாறை, திருமலை ஆகிய இடங்களில் உள்ள குடைவரைகளில் உள்ள தூண்களும் அரைத்தூண்களும் சதுரங்களாகவும், எட்டுப் பட்டையாகவும் பகுக்கப்படவில்லை. திருத்தங்கல் குடைவரையில் கீழ்ப்பகுதி சதுரமாகவும், நடு மற்றும் மேல்பகுதிகள் எட்டுப்பட்டை உடையனவாகவும் உள்ளன. நாமக்கல் முதலாவது குடைவரையில் இரண்டாவது வரிசைத் தூண்கள் மூன்று சதுரங்கள், இரண்டு எட்டுப் பட்டைகள் கொண்டன.

திருச்சி கீழ்க்குடைவரையில் உள்ள தூண்கள் கீழே சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டை கொண்ட தாகவும், மேலே தாடி, கலசம், போன்ற உறுப்புக்களைக் கொண்டனவாகவும் உருவாக்கப்பட்டுள்ளன. குடுமியான் மலையில் உள்ள தூண்கள் கலசம், கும்பம் போன்ற அமைப்புகளுடன் காணப்படுகின்றன. இவை சாளுக்கிய பாணியில் உள்ளனவாகக் கருதப்படுகிறது. மலையடி பட்டியில் உள்ள திருமாலுக்கு உரிய இரண்டாவது குடைவரையில் உள்ள தூண்கள், அரைத்தூண்கள் ஆகியவற்றின் மேல்பகுதி கலசம், பலகை ஆகிய வற்றையும், இடையில் தாடி என்ற அமைப்பையும், கீழே உட்கார்ந்த நிலையில் உள்ள சிங்கத்தைக் கொண்டனவாகவும் உள்ளன. இவை இராசசிம்மன் பாணியில் அமைக்கப்பட்டதாகக் கருதலாம்.

தூண்களின் சதுரங்களில் ஒரு சில குடைவரைகளில் (திருச்சி) தாமரை இதழ்களும், வேறு சில குடைவரை களில் (மகேத்திரவாடி) சதுரங்களில் சதுர அமைப்புக்குள் தாமரை இதழும், சதுர அமைப்பின் மூலைகளில்

கொடிகளும் உருவாக்கப்பட்டுள்ளன. ஒருசிலவற்றில் (மலையடி குறிச்சி) தூண்களில் முன்புறச் சதுரங்களிலும், வேறுசிலவற்றில் (சீயமங்கலம்) இருபுறச் சதுரங்களிலும், இன்னும் சிலவற்றில் (மாமண்டூர் 4வது குடைவரை) பின் பக்கம் நீங்கலாக ஏனைய மூன்று பக்கங்களில் உள்ள சதுரங்களிலும், மற்றும் சிலவற்றில் (திருமலாபுரம்) நான்கு பக்கங்களில் உள்ள சதுரங் களிலும் தாமரை இதழ்கள் காணப்படுகின்றன. மாமண்டூர் நான்காவது குடைவரை போன்றவற்றில் அரைத்தூண்களில் உள்ள சதுரங்களிலும் இத்தகைய அமைப்புகள் உள்ளன. திருச்சி போன்ற குடைவரைக் கோயில்களில் உருவாக்கப்பட்ட தாமரை இதழ்கள் பலவகைப்பட்டனவாகக் காணப்படுகின்றன.

மலையடி குறிச்சியில் தாமரை இதழ்களுக்கு இடையில் கந்தர்வர்கள் காணப்பட, ஆனையூரில் தாமரை இதழ்களுக்கு இடையில் கஜலட்சுமி, சிங்கம் யானையுடன் போர் செய்தல், எருது, யானை ஆகியவை உருவாக்கப்பட்டுள்ளன. சீயமங்கலத்தில் தூண்களின் மேற்புறச் சதுரங்களில் சிங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மேலும் அரைத்தூண்களின் சதுரங்களில் பெண் அடியார்கள், விருஷபாந்திகர், மற்றும் ஆடவல்லான் ஆகியோர் உருவாக்கப்பட்டுள்ளனர்.

சித்தன்னவாசல் குடைவரையில் மட்டும் தூண்களின் நடுவில் உள்ள எட்டுப் பட்டைகளில் தாமரை இதழ்கள் காணப்படுகின்றன. வேறு இடங்களில் சதுரங்களில் மட்டுமே இத்தகைய அமைப்பு உருவாக்கப் பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

போதிகை :

தற்காலத்தில் புஷ்ப போதிகையாக வளர்ச்சி அடைந்துள்ள போதிகையின் தொடக்க கால வடிவைக் குடைவரைகளில் காணலாம், அது இருவகைப்படும்.

1) வட்டமான வடிவைக் கொண்டது (திருச்சி கீழ்க் குடைவரை, மண்டகப்பட்டு; 2) கோணவடிவு (திருக்கழுக்குன்றம், மேலச்சேரி). பல குடைவரைகளில் கோண அல்லது வட்ட அமைப்பில் வரிகள் அமைக்கப் பட்டுள்ளன. அவை அலைபோன்று வரிசை வரிசையாக உள்ளமையால், அத்தகைய போதிகை தரங்கப் போதிகை எனப்படும். இவற்றின் நடுவில் பட்டைகள் உருவாக்கப்பட்டிருக்கும். பிள்ளையார்பட்டி, வரிச்சூர் இரண்டாவது குடைவரை ஆகியவற்றில் வட்டமான போதிகைகளில் தரங்க அமைப்பு உருவாக்கப் பட்டுள்ளன. ஆனையூர், திருமலை ஆகியவற்றில் கோணவடிவான போதிகைகளில் தரங்க அமைப்பு காணப்படுகிறது. ஆனையூர் குடைவரையில் போதிகை யின் நடுவில் உள்ள பட்டையில் பூ உருவாக்கப் பட்டுள்ளது.

வாயிற்காப்போர் :

குடைவரையின் முகப்பில் இரு கோடியில் உள்ள அரைத்தூண்களை ஒட்டிய புரைகளில் இரு வாயிற் காப்போரும், உள்ளே உருவாக்கப்பட்டிருக்கும் கருவறைக்கு இருபுறம் இரு வாயிற்காப்போரும் அமைக்கும் மரபு (தளவனூர்) பின்பற்றப்பட்டு வந்தது. ஒருசிலவற்றில் (திருக்கோகர்ணம்) வாயிற்காப்போரை அமைக்கவில்லை. குரங்கணில் முட்டத்தில் முகப்பில் வாயிற்காப்போரை உருவாக்காது, உள்ளே அமைக்கப் பட்ட 3 கருவறைகளுக்கும், கருவறை ஒன்றுக்கு இரண்டு வாயிற்காப்போர் வீதம், 6 பேர் காணப்படுகின்றனர். திருச்சிக் கீழ்க்குடைவரைக் கோயில் முகப்பில் இரு வாயிற்காப்போரும், இரண்டு கருவறைகளுக்கு கருவறைக்கு இருவர் வீதம் நான்கு வாயிற்காப்போரும், மண்டபத்தின் பின்சுவரில் உள்ள ஐந்து புடை சிற்பங் களுக்கு இருபுறம் இரு வாயிற்காப்போரும் ஆக 8 பேர் உருவாக்கப்பட்டுள்ளனர்.

பிற்காலக் கோயில்களில் உள்ள வாயிற்காப்போர் நான்கு கைகளுடனும், வாயில் கோரைப்பற்களுடனும் காணப்படுவதன்றி, அவர்களது ஒரு காலுக்கு அடியில் சிங்கம் அல்லது பாம்பு அமைக்கப்பட்டிருக்கும். சாதாரண மனிதர்களைக் காட்டிலும் வல்லமை மிக்கவர்கள் இவர்கள் என்பதை உணர்த்தவே இவ்வாறு உருவாக்கி இருக்கவேண்டும். ஆனால் குடைவரைகளில் உள்ள வாயிற்காப்போருக்கு இரு கைகள்தாம் உருவாக்கப்பட்டன. அவர்களது வாயில் கோரைப் பற்கள் அமைக்கப்படவில்லை. ஒரு சில குடைவரை களில் மட்டும் வாயிற்காப்போரின் தலையில் கொம்பு உருவாக்கப்பட்டுள்ளன. குன்றக்குடி இரண்டாவது குடைவரை, திருமெய்யம் முதலாவது குடைவரை, சியமங்கலம், குரங்கணில் முட்டம் ஆகியவற்றை உதாரணங்களாகக் கூறலாம். இத்தகைய அமைப்பு எல்லா இடங்களிலும் இல்லை.

இவர்கள் சமபங்க நிலை (திருக்கழுக்குன்றம், தளவனூர்), அல்லது திரிபங்க நிலை (அரிட்டாபட்டி, செவல்பட்டி)யில் நின்றபடி அமைக்கப்பட்டனர். இவர்கள் மகேந்திரவர்மன் பாணியில் சாய்ந்த நிலையில் (திருச்சி, செவல்பட்டி) காணப்படுவர் அல்லது மாமல்லன் பாணியில் நேரான பார்வை (குன்றக்குடி முதல் குடைவரை, தளவனூர்) உடையவராக உருவாக்கப்பட்டிருப்பர். ஆனால் கீழ் மாவிலங்கையில் இவர்கள் நுழைவாயிலை நோக்கியபடி காணப்படு கின்றனர்.

இவர்கள்தம் கைகள் பல நிலைகளில் அமைக்கப் பட்டுள்ளன. ஒரு கை கதை மீது சாய்ந்து இருந்தால், கதையைச் சுற்றி பாம்பை உருவாக்கும் மரபு பின்பற்றப் பட்டு வந்தது. (சியமங்கலம், மலையடிபட்டி முதலாவது குடைவரை). அவர்களுடைய கைகள் உள்ள பல நிலைகளாவன :—

சூசிமுத்திரை—பேச்சிப்பாறை

பதாகை முத்திரை—அரிட்டாபட்டி

தண்ட முத்திரை—திருமெய்யம் (2)

கடிமுத்திரை – திருமெய்யம் (2)

கத்யவலம்பித முத்திரை – குன்றக்குடி (1)

அபய முத்திரை—ஆனையூர்

ஊருமுத்திரை—திருச்சிக் கீழ்க்குடைவரைக்கோயில்

வணக்கம் அல்லது வியப்பை

உணர்த்த மேலே தூக்கிய நிலை—திருமெய்யம் (2)

மார்பில் இரு கைகளையும்
கட்டிய நிலை—குன்னாண்டார் கோயில் (1)

விரல்கள் மடக்கிய நிலையில்
அக்குளுக்குக் கீழே—குரங்கணில் முட்டம்

இவர்கள் கைகளில் உள்ள பொருள்களாவன :-

பாம்பு—மலையடிபட்டி (1)

மழு—செவல்பட்டி

கத்தி, கேடயம்—சீயமங்கலம்

மலர்—வரிச்சூர் (3)

ஒரு சில குடைவரைகளில் முனிவர்கள், பூதங்கள் போன்றவை முகப்பு அல்லது கருவறைக்கு இருபுறமும் காணப்படுகின்றன :-

கருவறைகளுக்கும் பின்
சுவருக்கும் இடையில்
குறுகிய கால்கள், தொந்தி
யுடன் இருகைகளை இடுப்
பில் ஊன்றிய நிலை—திருச்சிகீழ்க் குடைவரை

கருவறைக்கு இருபுறம் பூதங்கள்—திருமலை
,, பெண்கள்—பிரான்மலை
,, மலர்களுடன்—
இரு அடியார்கள்— } மலையடிபட்டி (2) ஆனைமலை (2)

முகப்பில் முடியில் பாம்புடன்
ஒரு கட்டிளங்காளை ஒரு
புறமும், துண்ணேர் இடையாள்
மறறொரு புறமும்—பேச்சிப்பாறை

இரு முனிவர்கள்—தேவர்மலை, மாமண்டூர் (3)

திருச்சி கீழ்க்குடைவரையில் கீழ்ப்பகுதியில் உள்ள கருவறைக்கு வடபுறம் உள்ள வாயிற்காப்போரின் ஒரு கால் ஓர் அசுரன் தலைமீது வைத்த நிலையில் உருவாக்கப் பட்டுள்ளது. பிற்காலக் கற்றளிகளின் வாயிற்காப்போரின் காலடியில் சிங்கம் அல்லது பாம்பு அமைக்கும் மரபிற்கு இதை முன்னோடியாகக் கொள்ளலாம்.

சீயமங்கலம் குடைவரையில் முகப்பிற்கு இருபுறம் உள்ள வாயிற்காப்போரின் தலைக்கு மேலுள்ள மகர தோரண அமைப்பு கவினுற உருவாக்கப்பட்டுள்ளது கண்டுகளிக்கத்தக்கதாம்.

கருவறை :

கருவறையை மட்டும் கொண்ட குடைவரைகளைத் தவிர ஏனையவற்றில் பொதுவாகப் பின்சுவரில் ஒரு கருவறை அமைக்கப்பட்டிருக்கும். மலையடி குறிச்சி, திருக்கழுக்குன்றம் ஆகியவற்றை உதாரணங்களாகக் கூறலாம். திருச்சி கீழ்க்குடைவரை, திருவெள்ளறை முதலாவது குடைவரை ஆகியவற்றில் இரு கருவறைகளும் மண்டகப்பட்டு மற்றும் மாமண்டூர் மூன்றாவது குடைவரை ஆகியவற்றில் 3 கருவறைகளும் உருவாக்கப் பட்டுள்ளன. பேச்சிப்பாறை, பல்லாவரம், அறைகண்ட

நல்லூர், திருப்பரங்குன்றம் முதலாவது குடைவரை ஆகிய குடைவரைகளில் 5 கருவறைகளும், விளாப்பாக்கம், குரங்கணில் முட்டம், மாமண்டூர் முதலாவது குடைவரை ஆகியவற்றில் 7 கருவறைகளும் அமைக்கப்பட்டுள்ளன.

மலையடிகுறிச்சி, ஆனைமலை (1), மலையடிபட்டி(1) ஆகியவற்றில் உள்ள கருவறைகளுக்குக் கீழ்ப்பாகத்தில் வரி, வரிமானம், குமுதம் ஆகிய அமைப்புகளுடன் அதிட்டானம் உருவாக்கப்பட்டுள்ளது. திருச்சி கீழ்க் குடைவரை மற்றும் மாமண்டூர் மூன்றாவது குடைவரை ஆகியவற்றில் உள்ள கருவறைகளுக்கு மேல்பகுதியில் கூடுகளுடன் கூடிய கபோதம் அமைக்கப்பட்டுள்ளது. மாமண்டூர் நான்காவது குடைவரை, திருக்கழுக்குன்றம், மகேந்திரவாடி, குரங்கணில் முட்டம் ஆகிய இடங்களில் உள்ள கருவறைகளை அதிட்டானம் மற்றும் கபோதம் ஆகியவை அணி செய்கின்றன. திருச்சியில் உள்ள கருவறையைக்கீழே அதிட்டானமும், மேலே கந்தர்வர்கள் தலைகளுடன் கூடிய மூன்று கூடுகள் கொண்ட கபோதமும் அலங்கரிக்கின்றன. பேச்சிப்பாறையில் உள்ள கருவறையின் முகப்பில் கந்தர்வர்கள் தலைகளுடன் கூடிய இரு கூடுகள் கொண்ட கபோதமும், பூதகண வரிசையும் உருவாக்கப்பட்டுள்ளன. குடுமியான் மலை மற்றும் தான்தோன்றிமலை ஆகிய இடங்களில் கருவறைகளின் முகப்பில் பூதகண வரிசை அமைக்கப் பட்டுள்ளது. ஆனைமலை இரண்டாவது குடைவரையில் கருவறையின் கீழ்ப்பகுதியில் அதிட்டானமும், அதன் இருபுறமும் பூதங்களுடன் கூடிய நான்கு அரைத்தூண் களும் காணப்படுகின்றன. மலையடி குறிச்சியில் கருவறைக்கு இருமருங்கும் விமானம் போன்ற அமைப்புகள் உள்ளன. அவ்விரு அமைப்புகளையும் மூன்று கந்தர்வர்களுடன் கூடிய திருவாசி இணைக்கிறது.

திருமாலுக்கு உரிய குடைவரைகளில் அவனுக்கே உரிய சயனக் கோலத்தில் அரங்கநாதனாகப் பள்ளி

கொண்டுள்ள நாமக்கல் இரண்டாவது குடைவரை, சிங்காவரம், திருத்தங்கல், திருமெய்யம், மலையடிபட்டி இரண்டாவது குடைவரை ஆகிய இடங்களில் அமைக்கப் பட்டுள்ள கருவறைகள் அவன் பள்ளி கொள்வதற்கேற்ப நீண்ட அமைப்பினைக் கொண்டுள்ளது.

### கருவறையில் உள்ள இறைவன் திருவுரு (மூலவர்) :-

மகேந்திரவர்மன் மற்றும் அவன் மகன் நரசிம்மன் காலத்தில் உருவாக்கப் பெற்ற குடைவரை களில் உள்ள கருவறைகளில் இறைவனின் எந்த வடிவமும் புடைசிற்பமாக அமைக்கப்படவில்லை. ஆனால் இறைவன் திருவுருவை வைக்கத் தக்க வழிவகை செய்யப் பட்டிருந்தது. இலிங்கத்திருவுருவைத் தனியாக வைக்க, கருவறையில் குழியும் (திருச்சி), திருமால் திருவுருவை வைக்க நீண்ட இருக்கையும் (மகேந்திரவாடி) அமைக்கப் பட்டிருந்தன.

குடைவரைகளில் பெரும்பாலானவை சிவ பெருமானுக்கு உரியதாம். இதனின்றும் அக்காலத்தில் சைவசமயம் அடைந்திருந்த உன்னத நிலையை உணரலாம். பல்லவர்களால் உருவாக்கப் பெற்ற குடைவரைகளில் மேலச்சேரி நீங்கலாக ஏனையவற்றில் கருவறையில் இலிங்கத் திருவுருவைப் பாறையிலேயே அமைக்கவில்லை. மேலச்சேரியில் மட்டும் இலிங்கத் திருவுரு குடைவரையின் ஒருபாகமாக உருவாக்கப் பட்டுள்ளது.

பாண்டியர்களும், முத்தரையர்களும் தாங்கள் அமைத்த குடைவரைகளில் இலிங்கத் திருவுருவை அதன் ஒரு பாகமாகவே உருவாக்கும் மரபைப் பொதுவாகப் பின்பற்றியுள்ளார்கள். திருமலாபுரம், கங்கை கொண்டான் முதலாவது குடைவரை, வரிச்சூரில் உள்ள மூதல் மூன்று குடைவரைகள் ஆகியவற்றைப் பாண்டியர்கள் இம்மரபைப் பின்பற்றியதற்குச் சான்று

களாக விளங்க, நார்த்தா மலல இரண்டாவது குடைவரை, திருக்கோகர்ணம், பூவாலக்குடி ஆகிய வற்றை முத்தரையர்கள் இதைக் கடைப்பிடித்தமைக்கு உதாரணங்களாகக் கூறலாம்.

இலிங்கத் திருவுருவை அமைத்துள்ள ஆவுடையார் பொதுவாக, சதுர அமைப்பைக் கொண்டுள்ளது. எடுத்துக்காட்டாக நார்த்தா மலை இரண்டாவது குடைவரை, குடுமியான்மலை, தேவர்மலை, பூவாலக்குடி ஆகியவை இத்தகு அமைப்புடன் விளங்குகின்றன. ஒரு சில குடைவரைகளில் ஆவுடையார் வட்டமாகவும் (அரிட்டாபட்டி, மலையக்கோயில் முதலாவது குடைவரை), வேறு சிலவற்றில் எட்டுப்பட்டை கொண்ட தாகவும் (குன்னாண்டார் கோயில் முதலாவது குடைவரை, மலையக்கோயில் இரண்டாவது குடைவரை) காணப்படுகின்றன.

சிவபெருமானின் மகேசுவர வடிவங்கள் 25 என்று போற்றப்படுகின்றன; அவற்றில் பெரும்பாலானவை தேவாரப் பாடல்களால் பரவப்பட்டுள்ளன. இருப்பினும் மகேசுவர வடிவங்கள் 25இல் அன்னையுடன் கூடிய அண்ணல் (உமாசகிதமூர்த்தி—திருமலை, பிரான்மலை ஆகிய இடங்களிலும்), பெண்ணோடு ஆணா கியபெம்மான் (அர்த்தநாரீசுவரர்—திருப்பரங்குன்றம் இரண்டாவது குடைவரையிலும்), சிவனுமை முருகு (சோமாஸ்கந்த மூர்த்தி-திருப்பைஞ்ஞீலியிலும்) ஆகிய திருவுருவங்கள்தாம் கருவறையில் மூலவராக உள்ளன. பிரான்மலையில் அண்ணல் சுகாசனத்திலும் அன்னை உத்குடி இருக்கையிலும் இருக்க, திருமலையில் இருவரும் உத்குடி இருக்கையில் உட்கார்ந்த படி உருவாக்கப்பட்டுள்ளனர். திருப்பைஞ் ஞீலியில் உள்ள சோமாஸ்கந்த வடிவில் அன்னை அண்ணலுக்கு இடப்பக்கத்திற்குப் பதில் வலப் பக்கத்தில் இருக்க, அவனது காலடியில் முயலகன்

காணப்படுகிறான். பல்லவ மன்னன் இராசசிம்மன் காலத்தில் கருவறைக்குப் பின்கவரில் சோமாஸ்கந்த வடிவமும், அதற்கு முன்னால் 16 பட்டையுடன் கூடிய இலிங்கமும் அமைக்கும் மரபு ஏற்பட்டது. இத்தகைய அமைப்பு திருப்பரங்குன்றத்தில் காணப்படுகிறது.

திருப்பரங்குன்றத்தில் இந்து சமயத்தின் அறுவகைப் பிரிவுகளில் சௌரத்தைத் தவிர ஏனைய ஐந்திற்கும் உரிய சிவபெருமான், கொற்றவை, திருமால், பிள்ளையார், முருகன் ஆகியோர் மூலவர்களாக உள்ளனர். கொற்றவையும் பிள்ளையாரும் மூலவராக உள்ள குடைவரைகள் வேறு இல்லை. முருகனை மூலவராகக் கொண்ட குடைவரை ஆனைமலை இரண்டாவது கோயிலாகும்.

ஆனைமலை இரண்டாவது குடைவரையில் முருகனும் அவனது துணைவியான தெய்வயானையும் உருவாக்கப்பட்டுள்ளனர். திருப்பரங்குன்றத்தில் தெய்வயானை திருமணம் நடந்தது என்ற புராண வரலாறுப்படி, அங்குள்ள வடிவங்களை முருகன், தெய்வயானை, நாரதர் என்று சொல்லப்படுகிறது. நாரதர் உடன் இருப்பதையும், பரிபாடலில் 19வது பாடலில் நப்பண்ணனார் கூறியுள்ளதையும் கருத்தில் கொண்டால், அங்குள்ள பெண் வடிவம் வள்ளி எனக் கொள்ளலாம். அன்னை மீனாட்சி அருளாட்சி புரியும் மதுரை மாநகருக்கு ஒருபுறம் தெய்வயானையுடன் ஆனைமலை இரண்டாவது குடைவரையிலும், மறுபுறம் வள்ளியம்மையுடன் திருப்பரங்குன்றத்திலும் முருகன் உள்ளான்.

திருமால் நின்ற நிலையில் செவல்பட்டி, திருமலாபுரம், திருச்சிக் கீழ்க்குடைவரை, கீழ்மா விலங்கை, திருப்பரங்குன்றம் முதலாவது குடைவரை குறத்தியறை ஆகிய இடங்களில் காணப்படுகின்றான்: இவற்றில் திருச்சிக் கீழ்க்குடைவரை, திருப்பரங்குன்றம்

(முதலாவது குடைவரை) கீழ்மாவிலங்கை, குறத்தியறை ஆகிய இடங்களில் மூலவராக உள்ளான். தான்தோன்றி மலையில் உள்ள வடிவம் திருமாலாகப் பரவப்படுகிறது. கீழ்மாவிலங்கையில் உள்ள வடிவின் ஆடை அமைப்பு தனித்தன்மை கொண்டதாகக் கருதப்படுகிறது.

அவனுக்குரிய சயனக்கோலத்தில் அரங்கநாதனாக நாமக்கல் இரண்டாவது குடைவரை, சிங்காவரம், திருத்தங்கல், திருமெய்யம் முதலாவது குடைவரை, மலையடிபட்டி இரண்டாவது குடைவரை ஆகிய இடங்களில் உருவாக்கப்பட்டுள்ளான். சுற்றுப்புறத் தெய்வ வடிவங்கள் பெரும் அளவில் உள்ள திருமெய்யத்தில் உள்ள வடிவம் மட்டும் உத்தம வகுப்பைச் சார்ந்தது. ஏனையவை மத்திய வகுப்பைச் சார்ந்தனவாம். நாமக்கல்லில் உள்ளது கார்க்கோடக சயனம்.

திருமாலின் பத்துத் தோற்றங்களில் (அவதாரங்களில்) நரசிம்மத்தை மட்டும் மூலவராகக் கொண்ட மூன்று குடைவரைகள் உள்ளன. அவையாவன : சிங்கப் பெருமாள் கோயில், ஆனைமலை முதலாவது குடைவரை, மற்றும் நாமக்கல் முதலாவது குடைவரை. நாமக்கல்லில் மட்டும் நரசிம்மத்துடன் சூரியசந்திரர்கள், சிவன், பிரமா ஆகியோர் உருவாக்கப்பட்டுள்ளனர். படைக்கலங்கள் கத்திரி முத்திரையில் அமைக்கப் பட்டுள்ள கைகளின் விரல்களுக்கு நடுவில் இல்லாது தனியாக மேலே உருவாக்கப்பட்டுள்ளன. இரணியனது மார்பைக் கை நகங்களால் பிளந்ததைக் குறிக்க நரசிம்மத்தின் முன் வலக்கையில் சிவப்பு நிறம் காணப்படுகிறது.

சித்தன்னவாசலில் கருவறையில் தலைக்கு மேல் மூன்று குடைகளுடன் மூன்று தீர்த்தங்காரர்கள் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளனர்.

**சுற்றுப்புற தெய்வ வடிவங்கள் :**

கற்றளிகளில் சுற்றுப்புற தெய்வ வடிவங்கள் கற்சிலைகளாகவோ அல்லது செப்புச் சிலைகளாகவோ காணப்படுகின்றன. இறைவனது பல்வேறு வடிவங் கள் உள்ளன. குடைவரைகள் அமைக்கப்பட்ட தொடக்க காலத்தில் புடைசிற்பங்கள் உருவாக்கப்பட வில்லை. பல்லவ மன்னன் இராசசிம்மன் காலத்தில் தான் இவை சிறப்பிடம் பெறலாயின.

மாமல்லபுரத்தில் பிள்ளையார் தனியாக இல்லை. இராமனுச மண்டபத்தில் முகப்பில் உள்ள பூதகண வரிசையில் நடுவில் யானையின் தலையுடன் ஒரு வடிவம் உள்ளது. இதைப் பிள்ளையாராக, கணபதியாகக் கொள்ளப்படுகிறது. கணபதி அதாவது கணங்களின் பதி அதாவது தலைவன். மாமல்லபுரத்திற்கு வெளியே பல்லவர்களால் உருவாக்கப்பெற்ற குடைவரைகளில் வல்லம் முதலாவது மற்றும் மூன்றாவது குடைவரை களில் மட்டும் வலம்புரி பிள்ளையார் வடிவம் காணப்படுகிறது.

பாண்டியர்கள் மற்றும் முத்தரையர்களது குடைவரைகளில் பிள்ளையார் வடிவம் பல காணப்படு கின்றன. திருமலாபுரம், திருக்கோகர்ணம், மகிபாலன் பட்டி, திருச்சிகீழ்க்குடைவரை ஆகிய இடங்களில் உள்ள பிள்ளையாருக்கு நான்கு கைகளும், பிள்ளையார்பட்டி, குன்றக்குடி முதலாவது குடைவரை ஆகிய இடங்களில் இரண்டு கைகளும் உருவாக்கப்பட்டுள்ளன. துதிக்கை பிள்ளையாருக்குப் பல இடங்களில் வலப்பக்கமாக அதாவது வலம்புரியாக அமைக்கப்பட்டுள்ளன. குடுமியான் மலை, தேவர் மலை, பூவாலக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய இடங்களில் உள்ள வடிவங்களை உதாரணங்களாகக் கூறலாம். குறத்தியறையில் ஐந்து முகப் பிள்ளையாரும், திருப்பரங்குன்றம் இரண்டாவது

குடைவரையில் 12 கைகளுடன் சிங்கத்தின் மீது பிள்ளையாரும் காணப்படுகின்றனர். இந்த வடிவங்களைப் பிற்காலத்தவையாகக் கருதலாம். பிள்ளையார் வடிவம் காணப்படும் அளவு தெய்வத்தின் ஏனைய வடிவங்கள் காணப்படவில்லை. இதனின்றும் பிள்ளையார் வழிபாடு பாண்டியர்கள், மற்றும் முத்தரையர்கள் ஆண்ட பகுதிகளில் பரவலாக இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

சிவபெருமானின் கீழே குறிப்பிட்ட வடிவங்கள் அவற்றிற்கு எதிரே குறிப்பிட்ட குடைவரைகளில் காணப்படுகின்றன :—

ஆடல்வல்லான் : திருமலாபுரம் செவல்பட்டி, சியமங்கலம், திருப்பரங்குன்றம் முதலாவது குடைவரை, மூவரை வென்றான் திருப்பரங்குன்றம் இரண்டாவது குடைவரை, குன்றக்குடி முதலாவது குடைவரை, கடைசியாகக் குறிப்பிட்ட மூன்று இடங்களில் உள்ள வடிவங்களின் அமைப்பினைக் கருத்தில் கொண்டால், அவை பிற்காலத்தியவையாகத் தெரிகின்றன. ஏனைய இடங்களில் உள்ளவை தொன்மையானவையாம்.

இலிங்கோற்பவர் : பிள்ளையார்பட்டி குன்றக்குடி முதலாவது குடைவரை, திருமெய்யம் இரண்டாவது குடைவரை;

கங்கைவார் சடைக்கரந்தார் : திருச்சி திருக்கோகர்ணம்.

விருஷபாந்திகர் : சியமங்கலம்.

பைரவர் : திருப்பரங்குன்றம் இரண்டாவது குடைவரை

சேடியுடன் உமா
சமிதமூர்த்தி : குன்னாண்டார் கோயில் முதலாவது குடைவரை.

இலிங்கோற்பவர் மற்றும் கங்கைவார் சடைக் கரந்தார் வடிவங்கள் அத்தகு வடிவங்களின் தொன்மையான அமைப்பைக் கொண்டுள்ளன.

கொற்றவை : திருச்சிராப்பள்ளி குன்றக்குடி முதலாவது குடைவரை, மலையடிபட்டி முதலாவது குடைவரை, சிங்காவரம், வல்லம் இரண்டாவது குடைவரை

திருச்சி கீழ்க்குடைவரை, மற்றும் குன்றக்குடியில் கொற்றவையுடன் அன்பர் ஒருவர் தன் தலையை அரிந்து கொள்வதாக அமைக்கப்பட்டுள்ளது. இது அக்காலத்தில் கொற்றவைக்குப் பலி கொடுக்கும் வழக்கம் இருந்தமையை உறுதிப்படுத்துகிறது. கொற்றவையின் பேராற்றலை உணர்த்த ஒரு சில இடங்களில் (குன்றக்குடி, மலையடிபட்டி) அவளுக்கு எட்டுக் கைகள் அமைக்கப்பட்டுள்ளன.

மேலச்சேரியில் பிற்காலத்தைச் சார்ந்த அன்னை பராசக்தியின் வடிவம் காணப்படுகிறது.

முருகன் : திருச்சி கீழ்க்குடைவரை, மலையடிபட்டி முதலாவது குடைவரை, குன்றக்குடி முதலாவது குடைவரை, திருமலை, மூவரை வென்றான், திருப்பரங்குன்றம் இரண்டாவது குடைவரை.

திருமலையில் உள்ள முருகனது திருவுருவிற்குக் கீழ் மயிலுடன் ஆடு காணப்படுகிறது. ஆடு முருகனது ஊர்தி என்பதற்கு ஏற்ப, இங்கும் திருப்பரங்குன்றம்

முதலாவது குடைவரையிலும் உருவாக்கப்பட்டுள்ளது. மூவரைவென்றான் மற்றும் திருப்பரங்குன்றம் இரண்டாவது குடைவரை ஆகிய இடங்களில் உள்ள வடிவங்களின் அமைப்பைக் கருத்தில் கொண்டால், அவை பிற்காலத்தனவாகத் தெரிகின்றன.

திருமாலின் பல்வேறு திருவுருவங்கள் காணப்பெறும் குடைவரைகள் :—

நின்ற நிலை : திருமலாபுரம் முதலாவது குடைவரை, திருவெள்ளறை இரண்டாவது குடைவரை, திருக்கழுக்குன்றம், செவல்பட்டி, மலையடிபட்டி இரண்டாவது குடைவரை இரு துணைவியருடன், குன்றக்குடி முதலாவது, இரண்டாவது குடைவரைகள் - தன் ஊர்தியாம் கருடனுடன், நார்த்தாமலை இரண்டாவது குடைவரை— திருமாலின் 12 வடிவங்கள்.

வைகுந்தநாராயணன் : நாமக்கல் முதலாவது குடைவரை பாலநரசிம்மருடன், திருப்பரங்குன்றம் முதலாவது குடைவரை.

பாலநரசிம்மர் : நாமக்கல் இரண்டாவது குடைவரை.

நரசிம்மர் : மலையடிபட்டி இரண்டாவது குடைவரை.

உக்ரநரசிம்மர் : நாமக்கல் முதலாவது குடைவரை, திருப்பரங்குன்றம் முதலாவது குடைவரை.

வராகம் : நாமக்கல் முதலாவது குடைவரை, திருப்பரங்குன்றம் முதலாவது குடைவரை. மலையடிபட்டி இரண்டாவது குடைவரை.

உலகளந்தான் : நாமக்கல் முதலாவது மற்றும் இரண்டாவது குடைவரைகள்.

சங்கரநாராயணன் : நாமக்கல் இரண்டாவது குடைவரை, குன்றக்குடி முதலாவது குடைவரை, பிள்ளையார் பட்டி.

பிரமா : திருமலாபுரம், திருச்சி கீழ்க் குடைவரை, திருக்கழுக்குன்றம்.

சூரியன் : திருச்சி கீழ்க்குடைவரை.

சப்தமாதர்கள் : திருக்கோளக்குடி, நார்த்தாமலை இரண்டாவது குடைவரை, திருக்கோகர்ணம் வரிச்சூர் - நான்காவது குடைவரை மலையடிபட்டி - முதலாவது குடைவரை.

சேட்டை : கங்கைகொண்டான் இரண்டாவது குடைவரை, வல்லம் - மூன்றாவது குடைவரை.

சண்டிகேசுவரர் : அரிட்டாபட்டி, தேவர் மலை, மலையடிபட்டி முதலாவது குடைவரை, குன்னாண்டார்கோயில் இரண்டாவது குடைவரை.

சம்பந்தர், அப்பர் : திருப்பரங்குன்றம் இரண்டாவது குடைவரை.

சுபார்சுவநாதர்,
சமண சமயத்தலைவர் : சித்தன்னவாசல்.

பிற :

திருக்கழுக்குன்றம், குரங்கணில் முட்டம், அறைகண்டநல்லூர், திருச்சி, திருப்பைஞ்ஞீலி, பிரான்

மலை, திருப்பரங்குன்றம், திருச்சுழியல் ஆகியவை மூவரின் தேவாரப்பாடல் பெற்ற தலங்களாம். திருமெய்யம், திருவெள்ளறை, மற்றும் திருத்தங்கல் ஆகியவை பெரியாழ்வார், மங்கை மன்னன், பூதத்தாழ்வார் ஆகியோரால் மங்களாசாசனம் செய்யப் பட்ட தலங்களாம். இருப்பினும் திருவருட் செல்வர் களின் திருப்பாடல்களில் குடைவரைகளைப்பற்றிய குறிப்பு ஏதும் இல்லை.

குடைவரைகளில் ஒரு சில அவற்றை உருவாக்கிய மன்னன் அல்லது சிற்றரசன் பெயரிலோ அல்லது பட்டப் பெயரிலோ அழைக்கப்படுகின்றன. அவையாவன:—

| குடைவரை உள்ள இடம் | மன்னன் அல்லது சிற்றரசன் பெயர் பட்டப்பெயர் | குடைவரையின் பெயர் |
|---|---|---|
| திருச்சி | மகேந்திரவர்மன் —லலிதாங்குரன் | லலிதாங்குரப் பல்லவகிருகம் |
| தளவனூர் | மகேந்திரவர்மன் —சத்ருமல்லன் | சத்ருமல்லே சுவராலயம் |
| சீயமங்கலம் | மகேந்திரவர்வன் —அவனிபாஜனன் | அவனிபாஜனன் குடைவரைக் கோயில் |
| நார்த்தமலை இரண்டாவது குடைவரை | சாத்தன் பழியிலி | பழியிலி ஈசுவரகிருகம் |
| மகேந்திரவாடி | மகேந்திரவர்மன் | மகேந்திர விஷ்ணுகிருகம் |

''தமிழக அஜந்தா'' என்ற புகழ்மிக்க சித்தன்ன வாசல் குடைவரை நீங்கலாக, திருமலாபுரம், திருநந்திக்கரை, ஆனைமலை இரண்டாவது குடைவரை,

திருமெய்யம் இரண்டாவது குடைவரை, நார்த்தமலை இரண்டாவது குடைவரை, மலையடிபட்டி இரண்டாவது குடைவரை, மாமண்டூர் மூன்றாவது மற்றும் நான்காவது குடைவரைகள் ஆகியவற்றில் சிதறுண்ட ஓவியங்கள் அல்லது வண்ணப்பூச்சுகள் காணப்படுகின்றன.

குடைவரைகளில் உள்ள கல்வெட்டுகளில் சில வரலாற்றுச் சிறப்பு மிக்கனவாக உள்ளன. எடுத்துக் காட்டாக, மண்டகப்பட்டுக் குடைவரையின் கல்வெட்டு மகேந்திரவர்மன் காலத்திற்குமுன் செங்கல், மரம் போன்றவற்றால் கட்டப்பட்ட கோயில்கள் இருந்தமையை உறுதிப்படுத்துகிறது. இது கோயில் கட்டிடக்கலை வளர்ச்சியில் சிறப்பு மிக்கதாகும். திருப் பரங்குன்றம் இரண்டாவது குடைவரைக் கோயிலுள்ள கல்வெட்டு இரண்டாவது பாண்டியப் பேரரசை நிறுவிய முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியனது பெரு வெற்றிகளைத் தெரிவிக்கிறது. திருமெய்யம் இரண்டாவது குடைவரைக்கோயில், குடுமியான்மலை. மலையக்கோயில் இரண்டாவது குடைவரை ஆகிய கல்வெட்டுகளிலிருந்தும் இசைக்கலையைப் பற்றிய அரிய செய்திகளை அறிய முடிகின்றது.

ஐந்து என்று எது இருந்தாலும் பஞ்ச பாண்டவருடன் தொடர்புபடுத்தும் மக்களிடையே பரவலாக உள்ள வழக்கம் குடைவரைகளையும் விட்டு வைக்கவில்லை. எடுத்துக்காட்டாக, வீரசிகாமணி குடைவரையின் மண்டபத்திலுள்ள ஐந்து வடிவங்கள் பஞ்சபாண்டவர் என்று அங்குள்ள மக்களால் அழைக்கப் படுகின்றன. 5 கருவறைகளைக் கொண்ட அறைகண்ட நல்லூர், மற்றும் பல்லாவரம் குடைவரைகளைப் பாண்டவர்கள் குகைகள் என்றும் பஞ்சபாண்டவர் குடைவரை என்றும் முறையே வழக்கில் சொல்லப் படுகிறது. தளவனூர் குடைவரைக் கோயிலின் முகப்பில் 5 கந்தர்வர்கள் தலைகள் கூடுகளில்

காணப்படுவதால், அங்குள்ள மக்களுக்கு இதைப் பஞ்ச பாண்டவர் கோயில் என்றால்தான் தெரியும். திருப்பரங்குன்றத்தில் காணப்படும் சமணர்களின் படுக்கைகள் பஞ்ச பாண்டவர் படுக்கைகள் என்று அழைக்கப்படுகின்றன.

சமணர்களின் ஒரே குடைவரை உருவாக்கப் பட்டுள்ள சித்தன்னவாசல் மலையில் சமணர்களது 17 படுக்கைகள் உள்ளன. அதே போன்று வீரசிகாமணி, குன்றக்குடி, திருமலை, திருச்சி, திருப்பரங்குன்றம் ஆகிய இடங்களிலும் சமணர்களின் படுக்கைகள் காணப்படுகின்றன.

## சிறப்புகள்

ஒவ்வொரு குடைவரையின் சிறப்புத் தன்மைகள் ஆங்காங்கே கூறப்பட்டுள்ளன. அவற்றைச் சுருக்கமாக இப்போது காண்போம் :—

| | |
|---|---|
| மலையடிகுறிச்சி : | 1. தாமரை இதழ்களுக்கு இடையில் கந்தர்வர்கள். |
| | 2. கருவறையின் இருபுறமும் விமானம் போன்ற அமைப்புகள் ; |
| | 3. கந்தர்வர்கள் தலைகளுடன் திருவாசி அவற்றை இணைத்தல். |
| பேச்சிப்பாறை : | முகப்பில் எழில்மிக்க ஆண் மற்றும் பெண்ணின் வடிவங்கள். |
| திருமலாபுரம் : | ஆடல்வல்லான் திருவுருவ அமைப்பு. |
| ஆனையூர் : | 1. போதிகையின் நடுவில் உள்ள பட்டையில் பூவேலை. |
| | 2. அரைத்தூண்களில் கஜலட்சுமி, எருது, யானை, சிங்கம், யானை போர். |

குறத்தியறை: 5 முகப்பிள்ளையார்.

நாமக்கல் முதலாவது,
இரண்டாவது
குடைவரைகள்: 1. இரண்டாவது வரிசை தூண்களுக்கு அதிட்டானம், கந்தர்வர்களுடன் கூடுகள் கொண்ட கபோதம்.

2. படைக்கலங்கள் தனியாகக் கைகளுக்கு மேலே இருத்தல்.

நாமக்கல் முதலாவது
குடைவரை: 1. இரண்டாவது வரிசைத் தூண்கள் மூன்று சதுரங்கள். இரண்டு எட்டுப் பட்டைகள் கொண்டன.

2. நரசிம்மரின் முன் வலக்கையில் சிவப்பு நிறம்.

3. பால நரசிம்மருடன் வைகுந்த நாராயணன்.

4. உலகளந்தான் நமுசியை மேலே சுழற்றுதல்.

நாமக்கல் இரண்டாவது
குடைவரை: 1. கார்க்கோடக சயனம்.

2. முகப்பில் கொடுங்கை போன்ற அமைப்பு.

3. பால நரசிம்மர்.

திருச்சி,
திருக்கோகர்ணம்: அன்னை இன்றி கங்காதரர்.

திருச்சி கீழ்க்
குடைவரை: 1. தாடி, கலசம் போன்ற உறுப்புகளுடன் தூண்கள்.

2. முகப்பில் பூதகணங்களுடன் கொடுங்கை போன்ற அமைப்பு.

3. இரண்டு கருவறைகளுக்கு முன் சிறிய முன் மண்டபங்கள்.

4. வாயிற் காப்போரின் காலடியில் அசுரன்.

5. இந்து சமயத்தின் ஆறு பிரிவுகளுக்கும் உரிய தெய்வ வடிவங்கள்.

திருப்பைஞ்ஞீலி : காலடியில் முயலகனுடன் அன்னை வலப்பக்கத்தில் அமைந்த சோமாஸ் கந்த வடிவம்.

திருத்தங்கல் : தூண்களின் கீழ்பகுதி சதுரமாகவும், நடு மற்றும் மேல் பகுதிகள் எட்டுப் பட்டை கொண்டனவாகவும் உள்ளன;

அரிட்டாபட்டி : 1. கோமுகத்தில் தாமரை மலர்.

2. அரைத்தூண்களைக் கொண்ட முகப்பு.

செவல்பட்டி : ஆடவல்லான் திருவுருவ அமைப்பு.

தான் தோன்றி மலை : திருமாலுக்கு உரியது என்று கருதப்படும் இதன் முகப்பில் பூதகண வரிசை.

நார்த்தாமலை

இரண்டாவது குடைவரை : திருமாலின் 12 வடிவங்கள்.

குடுமியான் மலை : சாளுக்கிய பாணியில் தூண்கள்.

பிரான்மலை, திருமலை : கருவறையில் அன்னையுடன் கூடிய சிவபெருமான்.

திருமலை, திருப்பரங்குன்றம்

முதலாவது குடைவரை : ஆடு ஊர்தியுடன் முருகன்.

திருப்பரங்குன்றம்
முதலாவது குடைவரை : 1. சௌரம் நீங்கலாக ஏனைய 5 பிரிவுகளுக்கு உரிய தெய்வ வடிவங்கள் மூலவர்களாக இருத்தல்.

2. இலிங்கத் திருவுருவிற்குப் பின்னால் சோமாஸ்கந்தர் வடிவம்.

பிள்ளையார்பட்டி, குன்றக்குடி
முதலாவது குடைவரை,
திருமெய்யம்
இரண்டாவது குடைவரை : இலிங்கோத்பவர்.

குடுமியான் மலை, திருமெய்யம்
இரண்டாவது குடைவரை,
மலையக்கோயில்
இரண்டாவது குடைவரை : இசைக்கல்வெட்டுகள்.

திருப்பரங்குன்றம்
இரண்டாவது
குடைவரை : 1. கருவறையில் பெண்ணோடு ஆணாகிய அம்மான் வடிவம்.

2. 12 கைகளுடன் லிங்கத்தின் மீது பிள்ளையார்.

குன்றக்குடி முதலாவது
குடைவரை : 8 கைகளுடன் ஆடல் வல்லான்.

வரிச்சூர்
இரண்டாவது குடைவரை : முகப்பில் விமானம்.

அரளிப்பட்டி : முகலிங்கம்.

ஆனைமலை
இரண்டாவது குடைவரை : தெய்வயானையுடன் முருகன் மூலவராக.

குன்னாண்டார் கோயில்
முதலாவது குடைவரை : 1. சேடியுடன் உமா சகிதமூர்த்தி.

2. சிவபெருமானின் பின் வலக்கைக்குப் பதில் பின் இடக்கையில் மழுப்படை.

மலையடிபட்டி இரண்டாவது
குடைவரை : கீழ்ப்பகுதியில் உட்கார்ந்த நிலையில் உள்ள சிங்கத்தைக் கொண்ட தூண்.

சித்தன்னவாசல் : ஓவியச்சிறப்பு.

கீழ்மாவிலங்கை : திருமாலின் ஆடை அமைப்பு.

மண்டகப்பட்டு : தமிழகத்தின் முதற் குடைவரை.

மேலச்சேரி : அன்னை பராசக்தியின் அழகான வடிவம்.

தளவனூர் : 1. முகப்பில் கந்தர்வர்கள் தலைகள் உள்ள கூடுகளைக் கொண்ட கபோதம்.

2. கபோதத்திற்குக் கீழே கந்தர்வர்களுடன் கூடிய மகர தோரணம்.

3. கருவறைக்கு முன் சிறிய முன் மண்டபம்.

சிங்காவரம் : 1. முகப்பில் இரு பெண் அன்பர்கள்.

2. திருமாலுக்கு உரிய குடைவரையில் துர்க்கையின் புடைசிற்பம்.

சீயமங்கலம் : 1. தூண்களின் சதுரங்களில் சிங்கங்கள்

2: அரைத்தூண்களின் சதுரங்களில் பெண் அடியார்கள், விருஷபாந்திகர், ஆடல்வல்லான்.

திருக்கழுக்குன்றம் : பிரம்மாவின் சடை அமைப்பு,

மாமண்டூர்
முதலாவது குடைவரை : இருபுறம் முகப்பு.

பல்லவர்கள், பாண்டியர்கள், முத்தரையர்கள் பாணி :

ஆதியும் அந்தமும் அற்ற அண்ணலாம் இறைவனுக்குக் காலத்தால் அழிக்க இயலாத திருக்கோயில்களை அமைக்கும் பேராவல் காரணமாக பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திரவர்மன் குடைவரைக் கோயில்களைத் தமிழகத்தில் தோற்றுவித்தான். எனவே குடைவரைகள் பல்லவர்பாணி என்றும், அதன் காலம் கி.பி. 600 முதல் 800 வரை என்றும் பிரான்சு நாட்டுப் பேராசிரியர் ஜோவியோ தூப்ரே அறுதியிட்டுள்ளார்.

பல்லவர்களது பாணியைப் பல்லவர் பாணி, முத்தரையர் பாணி, மற்றும் பாண்டியர் பாணி எனவும், பல்லவர் பாணியை மகேந்திரவர்மன் பாணி, மாமல்லன் பாணி, இராசசிம்மன் பாணி எனவும் மேலும் பகுக்கப் பட்டுள்ளது.

இயற்கையாக அமைந்துள்ள மலைச்சரிவில் குடைவரைகள் உருவாக்கப்பட்டன. ஒன்றிரண்டு அறைகளுடன் கூடிய மண்டபங்களைக் கொண்டிருந்தன. குடைவரையின் முகப்பில் உள்ள தூண்களும் அரைத் தூண்களும் பருமனாக இருந்தன. அவை மேற்பகுதியும் கீழ்ப்பகுதியும் சதுரங்களாகவும், நடுவில் எட்டுப்பட்டை கொண்டதாகவும் உருவாக்கப்பட்டன. நடுவில் பட்டையுடன் போதிகை தரங்க அமைப்பைக் கொண்டு இருந்தன. தூண்களில் தாமரை இதழ்கள் செதுக்கப் பட்டுள்ளன: கருவறையின் மேற்தளத்தில் கந்தர்வர்கள்

தலைகளுடன் கூடிய கபோதம் அமைக்கப்பட்டது. கருவறையின் இருபுறம் இருகைகள் கொண்ட மானிட உருவில் சாய்ந்த நிலையில் வாயிற்காப்போர் அமைக்கப் பட்டனர். கருவறையில் இறைவனின் எந்தத் திருவுருவும் இருக்காது. இவையாவும் மகேந்திரவர்மன் பாணியாகக் கருதப்பட்டன. பெரும்பாலான குடைவரைகள் இத்தகைய அமைப்பைத்தான் கொண்டுள்ளன.

மகேந்திரவர்மன் மகன் நரசிம்மவர்மன் என்ற மாமல்லன் காலத்தில் தூண்கள் பருமனாக அமைக்கப் படாமல், அவற்றின் மேல் பகுதி கலசம், கும்பம் போன்ற உறுப்புகளைக் கொண்டிருந்தன. அவற்றின் நடுப்பகுதி வட்டமாக இருந்தது. வாயிற்காப்போர் நேரான பார்வை உடையவராக இருந்தனர். இத்தகைய அமைப்பு மாமல்லன் பாணியாகக் கருதப்பட்டது.

மாமல்லன் வழித்தோன்றலான இராசசிம்மன் காலத்தில் உருவாக்கப்பட்ட தூண்களின் கீழ்ப்புறத்தில் உட்கார்ந்த நிலை அல்லது நின்ற நிலையில் உள்ள சிங்கம் காணப்படுகிறது. புடை சிற்பங்களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டது. கருவறையின் பின் சுவரில் சோமாஸ் கந்த வடிவம் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டது. அதன் முன்பு 16 பட்டையுடன் கூடிய இலிங்கத் திருவுரு வைக்கப்பட்டிருக்கும். இவை இராசசிம்மன் பாணி யாகும்.

பல்லவர்களைப் பின்பற்றி முத்தரையர்கள், அதியமான்கள் மற்றும் பாண்டியர்கள் தாங்கள் ஆண்ட பகுதிகளில் குடைவரைகளை உருவாக்கினர். இவற்றின் அமைப்புப் பொதுவாக பல்லவர்களது குடைவரையின் அமைப்பினைக் கொண்டிருந்தன. புடை சிற்பங்களை உருவாக்குவதில்தான் முக்கியமான வேறுபாடுகள் காணப்படுகின்றன;

முத்தரையர்கள் மற்றும் பாண்டியர்களது குடைவரைகளில் பிள்ளையார் அதிலும் வலம்புரி பிள்ளையார் வடிவம் சிறப்பாக இடம் பெற்றுள்ளது. இலிங்கத் திருவுரு பொதுவாகக் கருவறையின் ஒரு பகுதியாக அமைக்கப்பட்டுள்ளது. பிள்ளையாரையும், குடைவரையின் ஒரு பகுதியாக இலிங்கத்திருவுருவை அமைப்பதையும் முத்தரையர்கள் மற்றும் பாண்டியர்கள் ஆகிய இருவருக்கும் பொதுவாகக் கருதலாம். அதே போன்று இலிங்கோற்பவ வடிவையும் கொள்ளலாம்.

சப்தமாதர் மற்றும் சண்டிகேசுவரர் வடிவங்கள் அதிக அளவில் முத்தரையர்களது குடைவரைகளில் புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகின்றன. மேலும் அவர்களது குடைவரைகளில் உள்ள இலிங்கத்திருவுரு விற்குச் சதுரமான ஆவுடையார் பெரும் அளவில் உருவாக்கப்பட்டுள்ளது. எனவே இவற்றை முத்தரையர் பாணியாகக் கருதலாம்.

ஆடல் வல்லானின் தொன்மையான வடிவங்கள் பாண்டியர்களது குடைவரைகளில் காணப்படுவதால், அதைப் பாண்டியர் பாணியாகக் கொள்ளலாம். மேலும் உமா சகிதமூர்த்தி வடிவிற்கும் இவர்கள் சிறப்பிடம் அளித்துள்ளார்கள்.

இதனின்றும் இறைவனுக்குக் கால வெள்ளத்தை எதிர்த்து நிற்கும் திருக்கோயில்களை அமைப்பதில் தமிழக மன்னர்கள் பேரார்வம் கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது. எங்கெல்லாம் இயற்கையான மலைச்சரிவுகள் இருந்தனவோ, அவற்றையெல்லாம் தேடிக் கண்டுபிடித்து, அங்கெல்லாம் குடைவரைகளை உருவாக்குவதில் அவர்கள் எடுத்துக்கொண்ட பெருமுயற்சிகளே அவர்களது அளவிடலாகா ஆர்வத்தை நமக்கு உணர்த்துகிறது.

— — —

## பிற்சேர்க்கை—1

ஒரே இடத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட குடைவரைகள் உள்ளவற்றிற்கான விளக்கங்கள்.

வல்லம் : 1. சிவனுக்கு உரியது - சிறியது.

2. திருமாலுக்கு உரியது - சிறியது.

3. வசந்தேசுவரம் குடைவரைக் கோயில்.

மாமண்டூர் : 1. இருபுறமும் முமப்பினைக் கொண்டது.

2. முற்றுப்பெறாதது.

3. ருத்ரவாலீசுவரம் குடைவரைக் கோயில்.

4. திருமாலுக்கு உரியது

நாமக்கல் : 1. நரசிம்மரை மூலவராகக் கொண்டது.

2. அரங்க நாதரை மூலவராகக் கொண்டது - அதியேந்திர விஷ்ணுகிரகம்.

திருவெள்ளறை : 1. புண்டரீகாட்சர் திருக்கோயிலை அடுத்துள்ளது.

2. சிவனுக்கு உரியது.

திருமெய்யம் : 1. சத்தியமூர்த்தியை மூலவராகக் கொண்டது.

2. சத்தியகிரீசுவரரை மூலவராகக் கொண்டது.

மலையடிபட்டி : 1. வாகீசுவ்ரரை மூலவராகக் கொண்டது.

2. அரங்கநாதரை மூலவராகக் கொண்டது.

நார்த்தாமலை : 1. சிவனுக்குரியது - சிறியது.

2. பழியிலி ஈசுவரகிருகம் - சமணர் குன்று - பெரியது.

மலையக்கோயில் : 1. திருவருள் காளீசுவரரை மூலவராகக் கொண்டது.

2. சிறியது.

குன்னாண்டார் கோயில் : 1. பர்வதகிரீசுவரரை மூலவராகக்கொண்டது.

2. முற்றுப்பெறாதது - வடபுறம் உள்ளது.

3. முற்றுப்பெறாதது-தென்புறம் உள்ளது.

குன்றக்குடி : 1. மலைக்கொழுந்துநாதரை மூலவராகக் கொண்டது.

2. அண்ணாமலையாரை மூலவராகக் கொண்டது.

3. கந்தரேசுவரரை மூலவராகக் கொண்டது.

வரிச்சூர் : 1. உதயகிரி குடைவரைக் கோயில்.

2. அஸ்தகிரி குடைவரைக் கோயில்.

3. நீலகண்டேசுவரரை மூலவராகக் கொண்டது.

4. வீரபத்திரரையும், சப்த மாதர்களையும் கொண்டது.

ஆனைமலை : 1. நரசிம்மருக்கு உரியது.

2. முருகனுக்கு உரியது - லாடன் கோயில் என்றும் அழைக்கப்பெறும்.

திருப்பரங்குன்றம் : 1. 5 கருவறைகளைக் கொண்டது. முருகனது முதல் படைவீடாகப் போற்றப்படுவது.

2. அர்த்த நாரீசுவரருக்கு உரியது – உமையாண்டார் கோயில் என்றும் அழைக்கப் பெறும்.

கல்லைகொண்டான் : 1. முற்றுப் பெறாதது.

2. முற்றுப் பெற்றது.

திருமலாபுரம் : 1. முற்றுப் பெற்றது.

2. முற்றுப் பெறாதது.



# பிற்சேர்க்கை - 2

## ஆசனம், முத்திரை, ஆகியவற்றின் விளக்கங்கள்

### அ. ஆசனம் :

பர்யாங்காசனம் : இருகால்களும் தொங்கிய நிலையில் உட்கார்ந்து இருத்தல்.

உத்குடி ஆசனம் : ஒருகால் இருக்கை மீது குத்திட்டும், மற்றொரு கால் தொங்கிய நிலையிலும்

சுகாசனம் : உடம்பு எப்பக்கமும் சாய்வின்றி, நேராக நிமிர்த்தி, ஒரு கால் பொதுவாக இடக் கால் இருக்கை மீது படுக்கையாக இருக்க, மற்றொரு கால் தொங்கிய நிலையில் இருத்தல்.

### ஆ. முத்திரை :

ஊருமுத்திரை : ஊரு என்றால் தொடை; கைகள் தொடைமீது ஊன்றிய நிலை

அபய முத்திரை : விரல்கள் மேல் நோக்கி நீட்டிய நிலையில், உள்ளங்கை எதிரில் இருப்பவர் பக்கம் திருப்பி இருக்க, தன்னை அடைக்கலம் அடைந் தோரை "அஞ்சேல்" என்று கூறுமாப்போல் இருத்தல்;

கடிமுத்திரை : கடி என்றால் இடுப்பு; கை இடுப்பில் ஊன்றிய நிலை.

வரத முத்திரை : இடக்கை உள்ளங்கை எதிரில் இருப்பவர் பக்கம் திரும்பி இருக்க, விரல்கள் கீழ்நோக்கித் தாளினைச் சுட்டிக் காட்ட, தன் அடியை அடைந்தால், வேண்டிய வேண்டிய வாறு பெறலாம் எனக் கூறுமாப் போன்று இருத்தல்.

கத்ய வலம்பித முத்திரை : கை கீழே தொங்கிய நிலை.

கத்திரி முத்திரை : மோதிர விரலும் பெரு விரலும் உள்ளங்கை நடுவில் ஒன்றுசேர, சுண்டுவிரல் சிறிது வளைய, மீதி யுள்ள ஆட்காட்டி விரலும், நடு விரலும் ஆங்கில எழுத்து 'V' போன்று மேலே நோக்கி நீட்டி இருத்தல்; உள்ளங்கை எதிரில் இருப்பவரை நோக்கி இருத்தல்.

சூசி முத்திரை : ஆட்காட்டி விரலை மட்டும் நீட்டி எதிரே இருக்கும் பொருளைச் சுட்டிக் காட்டுதல்; ஏனைய விரல்கள் மடங்கி இருத்தல்.

தண்டமுத்திரை : (கஜமுத்திரை) தண்டம் என்றால் தடி; கஜம் என்றால் யானை; கை மார்பின் குறுக்கே நேராக நீட்டி இருத்தல்— கை தடி அல்லது யானை துதிக்கை போன்று நீட்டி இருத்தல்.

இ. கால்களின் நிலை :

சமபங்க நிலை : இரு கால்களும் நேராக நிற்பது.

திரிபங்க நிலை : ஒரு கால் நேராகவும், மற்றொரு கால் சற்றுச் சாய்ந்தும் காணப்படும்.

# பிற்சேர்க்கை - 3

## கோயில் கட்டிடக்கலைச் சொற்கள்

திருச்சுற்று : மதிலின் உள்ளே திருக்கோயிலைச் சுற்றும் வழி, பிரகாரம் எனவும் பெறும்.

திருமுன் : திருவுருவங்கள் எழுந்தருளியிருப்பது; சந்நிதி என்றும் வழங்கப்பெறும்.

கருவறை : மூலவர் எழுந்தருளியிருப்பது.

அதிட்டானம் : வரி, வரிமானம், குமுதம் ஆகிய உறுப்புகளைக் கொண்ட கட்டிடத்தின் அடிப்பகுதி; இது தான் மேலே உள்ள கட்டிடம் முழுமையும் தாங்குகிறது.

வரி : அதிட்டானத்தில் உள்ள சிறிய நீண்ட சதுரமான அமைப்பு.

வரிமானம் : அதிட்டானத்தில் உள்ள பெரிய நீண்ட சதுரமான அமைப்பு.

குமுதம் : அதிட்டானத்தில் உள்ள முப்பட்டை அல்லது அரைவட்டம் கொண்ட அமைப்பு.

கொடுங்கை : கட்டிட மேற்கூரையின் நீட்டிய பகுதி.

கபோதம் : கபோதம் என்றால் புறா என்று பொருள். புறா கட்டிடத்தை அணுகி, அதன் தூய்மையைக் கெடுக்காமல் இருக்கும் பொருட்டு, கட்டிடத்தின் மேல் பகுதியில் கட்டப்படும் வளைந்த அமைப்பு.

கூடு : கபோதத்தில் சிங்கமுகப்புடன் காணப்பெறும் அமைப்பு.

விமானம் : கருவறையின் மேல் பகுதி.

போதிகை : தூண்களின் மேல் பகுதியில் உள்ள அமைப்பு.

தரங்கப்போதிகை : கடல் அலை போன்று வரிகள் கொண்ட போதிகை.

அரைத்தூண் : தூண் போன்ற அமைப்பு ; ஆனால் தூண் போன்று தனியாக இராது : சுவருடன் ஒட்டி அமைத்து இருத்தல்.

புரை : கருவறை, மண்டபம் ஆகியவற்றின் சுவரில் தெய்வ வடிவங்களை வைக்க, குழி போன்ற அமைப்பு.

திருவாசி : புரைகளுக்கு மேலே உள்ள கொடி போன்ற அமைப்பு அல்லது உலோகப் படிமங்கள், சிலா வடிவங்கள் இவற்றைச் சுற்றித் தீப் பிழம்புகளுடன் காணப்படும் எழில் மிக்க படைப்பு.

மகரதோரணம் : மகர மீனின் வாய் போன்ற அமைப்புடன் கூடிய திருவாசி.

அர்த்தமண்டபம் : கருவறையை ஒட்டி உள்ள மண்டபம்.

முன்மண்டபம் : முகப்பில் உள்ள மண்டபம்.

## பிற்சேர்க்கை - 4

## BOOKS CONSULTED


1. Cave temples of Pallavas by K. R. Srinivasan.
2. Cave temples Tamil nadu & Kerala - by French Institute of Indology.
3. Early Chola temples by S. R. Balasubramanyam.
4. Middle Chola temples by S. R. Balasubramanyam.
5. Later Chola temples by S. R. Balasubramanyam.
6. Early Chola Art by S. R. Balasubramanyam.
7. A history of South India by K. A. Nilakanta Sastri.
8. The culture & history of Tamils by K. A. Nilakanta Sastri.
9. The Cholas by K. A. Nilakanta Sastri.
10. Studies in Chola history & administration by K. A. Nilakanta Sastri.
11. History of the Pallavas of Kanchi by R. Gopalan.
12. The role of Feudataries in Pallava history by M. S. Govindasamy.
13. Administration & Social life under the Pallavas by C. Minakshi.
14. Indian temple style by K. V. Soundararajan.
15. Tiruparuttikunram & its temples by T. N. Ramachandran.
16. The Art of Tamilnadu by R. Nagaswamy.

17. Pallava Antiquities Vol. I & II by C. Jouvedu Dubreuil.

18.* Nataraja in art, thought & culture by C. Sivaramamurti.

19. Elements of Hindu Iconography Vol. I-IV by T. A. Gopinatha Rao.

20. A topographical list of the inscriptions of the Madras Presidency Vol. II & III by V. Rangacharya.

21. Archeaeological Survey of India-South Indian inscriptions - Vol. XII - The Pallavas.

22. Indian Archeaeology - *1959-60, 1966-67, 1970-71.*

23. Ancient India No. 6.

24. South Indian Inscriptions-Vol. IV.

25. தென்னிந்திய கோயிற் சாசனங்கள் - Vol. III-Part II - critically edited by T. N. Subramanyan.

26. சோழர் கலைப்பாணி by எஸ். ஆர். பாலசுப்ரமணியம்.

27. திருவெள்ளறை by வெ. வேதாசலம்.

28. பல்லவர் வரலாறு by டாக்டர் மா. இராசமாணிக்கம்பிள்ளை.

29. பாண்டியர் வரலாறு by T. V. சதாசிவ பண்டாரத்தார்.

# பிற்சேர்க்கை - 5

ஆலய விளக்கம் :




[எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் அவர்களின் "முற்கால சோழர்களின் கலை" என்ற நூலிலிருந்து]

கிடைக்குமிடம் :
திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

தலைமை நிலையம் :
154, டி. டி. கே. சாலை,
ஆள்வார்பேட்டை, சென்னை-18.

கிளை நிலையங்கள் :
79, பிரகாசம் சாலை (பிராட்வே)
சென்னை-108.

திருநெல்வேலி-6. மதுரை-1.
கோயமுத்தூர்-1. கும்பகோணம்-1
திருச்சிராப்பள்ளி-2. சேலம் 1.

அப்பர் அச்சகம், சென்னை-108.